4 பக்கங்கள் 13 காசுகள்

பதிவு எண் எம். 8798



# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 10 | மதுரை 1—1—72 | சனி | [ மலர் 1



# சிம்சன் தொழிலாளர் மீது கண்மூடித்தனமான போலீஸ் தடியடி!

## ஏராளமான பேர் கைது!

### உண்ணாவிரதம் இருக்க வந்தவர்களை சுற்றிவளைத்து அடித்து நொறுக்கினர்

சென்னை, டிச. 31—

**சிம்சன் தொழிலாளர் போராட்டத்தில் இன்று போலீஸ் கண்மூடித்தனமான தடியடிப் பிரயோகம் செய்தது. இந்தத் தடியடிப் பிரயோகத்தில் ஏராளமான தொழிலாளர்களும் பொதுமக்களும் காயமடைந்தனர்.**

**ஏராளமான தொழிலாளர்களை கைது செய்து போலீஸ் லாரிகளில் ஏற்றிச் சென்றனர்.**

இத்தகைய அடக்குமுறை வெறியாட்டத்தை போலீஸ் கட்டவிழ்த்து விட்டிருந்தும் தடியடியே நடக்கவில்லையென்று போலீஸ் கமிஷனர் நிருபர்களிடம் கூறினார். தடியடிப் பிரயோகம் செய்யாவிட்டால் தொழிலாளர்களுக்குக் காயம் ஏற்பட்டது எப்படி என்று நிருபர்கள்கேட்டனர். அதற்கு தொழிலாளர்கள் தப்பியோட முயன்றதால் போலீசார் அடித்தனர் என்று போலீஸ் கமிஷனா மழுப்பினார்.

வேலைக்குத் திரும்பிய சிம்சன் தொழிலாளர்கள் மீது பழிவாங்கும் நடவடிக்கையாக நூற்றுக்கணக்கில் வேலை நீக்க நோட்டீஸ்கள் பிறப்பிக்கப்பட்டதால் மீண்டும் போராட்டம் தொடங்கியுள்ளது.

இந்நிலையில் காட்டூர் கோபால் தலைமையை நீக்கக் கோரியும் அவருடைய துரோக ஒப்பந்தத்தை ரத்து செய்யக் கோரியும் மவுண்ட் ரோடிலுள்ள அண்ணா சிலை முன்பாக தொழிலாளர்கள் ஐம்பது ஐம்பது பேராக உண்ணாவிரதம் இருக்கப் போவதாகஅறிவித்தனர். தொடர் உண்ணாவிரதம் இருப்பதைத் தடுக்க போலீஸ் இத்தகைய கண்மூடித்தனமான அடக்குமுறையைக் கட்டவிழ்த்து விட்டுள்ளது.

அண்ணா சிலையைச் சுற்றி போலீஸ் மயமாகக் காட்சியளித்தது. குதிரைப்படை போலீசாரும் நிறுத்தப் பட்டிருந்தனர். மவுண்ட் ரோடு நரசிங்கபுரம் தெருவிலிருந்து உண்ணாவிரதம் இருக்கும் தொண்டர்கள் ஊர்வலமாகச் சென்றதைப் போலீஸ் தடுத்தது.

அதனால் எல்லிஸ் சாலை வழியாக வேறு 50 தொழிலாளர்கள் அண்ணா சிலை முன் உண்ணாவிரதம் இருக்க வந்தனர். அவர்கள் மீது போலீஸ் பயங்கர தடியடிப் பிரயோகம் செய்தது பலர் காயமடைந்தனர். குதிரைப் படை போலீசும் சேர்ந்து கொண்டனர். அங்கு வந்த தொழிலாளர்கள் அடித்து விரட்டப்பட்டாலும் மூன்று தொழிலாளர்கள் அண்ணா சிலைக்கு அருகில் வந்துவிட்டனர். அவர்களையும் ஏறத்தாழ 20 போலீசார் சூழ்ந்து கொண்டு கடிகளால் அடித்தனர் பின்னர் அவர்கள் லாரிகளில் ஏற்றப்பட்டனர்.

பின்னர் அண்ணா சிலையைச் சந்திக்கும் எல்லா சாலைகளிலும் கூடியிருந்தவர்களை போலீசார் தடியால் அடித்து விரட்டினர். மவுண்ட்ரோடு தபாலாபீஸ் அருகே பஸ்ஸில் வந்திறங்கிய பயணிகளையும் போலீஸ் அடித்து விரட்டியது.

25-க்கு மேற்பட்ட போலீஸ் லாரிகளும், 20-க்கு மேற்பட்ட போலீஸ் ஜீப்புகளும் மவுண்ட் ரோடு பகுதியில் நிறுத்தப்பட்டிருந்தன. ஏராளமான தொழிலாளர்கள் கைது செய்யப்பட்டனர்.

### வி. பி. சி. கண்டனம்

தோழர் வி. பி. சிந்தன் விடுத்துள்ள அறிக்கையில் கூறியதாவது;

காலையிலிருந்து மவுண்ட் ரோடு நரசிங்கபுரத்தில் உள்ள அலுவலகத்தை சுற்றி வளைத்துக் கொண்டனர். ரவுண்டானாவில் உள்ள அண்ணா சிலையைச் சுற்றியும் போலீசார் எல்லா இடத்தையும் ஆக்கிரமித்துக் கொண்டனர். இந்தப் பயங்கரப் போலீஸ் முற்றுகையைக் கண்டும் அஞ்சாத சிம்சன் தொழிலாளர்கள் 50 பேர்கைகளில் கொடிகளுடன், கோரிக்கை முழக்கங்களுடன் எல்லிஸ்சாலை வழியாக வந்தனர். அவர்களைப் போலீசார் மிருகத்தனமாகத் தடியடி செய்து கலைத்தனர். என்றாலும் உண்ணாவிரதம் துவங்க அண்ணா சிலைக்கு அருகே வந்தனர். அந்த 3 தொழிலாளிகளை இருபதுக்கு மேற்பட்ட போலீசார் குண்டாந்தடியால் தாக்கினர். சிம்சன் தொழிலாளிகளை வெறி நாய்களைத் துரத்தி அடிப்பது போல் அடித்து இருக்கிறார்கள். போலீசாரின் இந்த அத்துமீறிய அடக்குமுறையை நான் வன்மையாகக் கண்டிக்கிறேன். சென்னை நகரில் சிம்சன் குரூப் கம்பெனிகளின் முன்பு எவ்வளவு தொழிலாளர்களைப் போலீசார் கைது செய்து ஏற்றிச் சென்றனர் என்ற விவரம் தெரியவில்லை. எவ்வளவு பேர் தடியடிக்கு ஆளாகி காயம் அடைந்தனர் என்ற விவரமும் கிடைக்கவில்லை.

இவ்வளவு அடக்குமுறைக்குப் பின்னரும் தொடர்ந்து உண்ணாவிரதப் போராட்டம் நடந்தே தீரும்.

"கம்புப் பறி!"

நான் வயலுக்குப் போறேன்...

அளந்து பார்த்தா உன் கம்பு அஞ்சு அடி இருக்கு. இது பயங்கர ஆயுதம்! உன்னைக் கைது பண்றேன்!

தஞ்சை விவசாயிகள்

தி.மு.க. அரசு

நிலப்பிரபுக்கள்

கீழத் தஞ்சையில் விவசாயிகள் 5 அடி கம்பு வைத்துக்கொள்ளக்கூடாது என்று தடை செய்யப்பட்டுள்ளது. ஆனால் நிலப்பிரபுக்கள் துப்பாக்கி வைத்துக்கொள்ள மட்டும் எவ்விதத் தடையுமில்லை. —செய்தி.

# வடவியட்நாம் மீது அமெரிக்க குண்டுவீச்சுக்கு சீன கண்டனம்!

பீகிங், டிச. 30—

வடவியட்நாம் மீது அமெரிக்கக் குண்டுவீச்சை சீன அரசாங்கம் கண்டித்துள்ளது. "மூன்று இந்தோ சீன நாடுகளின் மக்களும் இறுதி வெற்றி அடைவதற்கான முன்னேற்றத்தை அமெரிக்க ஏகாதிபத்திய வாதிகளும் அவர்களுடைய ஏவல் நாய்களும் தடுத்துவிட முடியாது" என்று அந்த அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

1971ம் ஆண்டானது மூன்று அண்டை நாட்டு மக்களும் வெற்றியும் முன்னேற்றமும் கண்ட ஆண்டாக இருந்துள்ளது. இப்பகுதியின் பலாபல நிலையில் புதிய மாறுதல் ஏற்பட்டுள்ளது. முன்னெப்போதும் இல்லாத அருமையான புரட்சிகர நிலைமை தற்போது நிலவுகிறது" என்று அந்த அறிக்கை மேலும் கூறுகிறது.

9-வது கெசாங் நெடுஞ்சாலை சண்டையிலும், வடகிழக்கு கம்போடியாவிலும், ஜார்ஸ் சமவெளியிலும், சாவோசைச் சேர்ந்த போலோவென்ஸ் பீடபூமியிலும், தென் வியட்நாமின் பல பகுதிகளிலும் வீரஞ்செறிந்த இந்தோ சீனத்தின் மூன்று நாட்டு மக்களும் உலகை உலுக்கிய வெற்றிகளை பெற்றுள்ளார்கள்" என்று அந்தச் செய்தி மேலும் கூறுகிறது.

இவ்வாண்டின் முதல் 10 மாதங்களில் 6 லட்சத்துக்கு மேற்பட்ட ஆக்கிரமிப்பாளர்களும் பொம்மை அரசின் துருப்புகளும் கொல்லப்பட்டனர் அல்லது காயப்படுத்தப்பட்டனர் அல்லது பிடிபட்டுள்ளனர். வரும் ஆண்டில் இன்னும் பெரிய வெற்றிகளை பெற இந்தோ சீன மக்கள் உறுதி பூண்டுள்ளனர் என்று அந்த அறிக்கை கூறுகிறது. இந்தோ சீனத்தில் அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் நடவடிக்கைகளை சீன மக்களும் அரசாங்கமும் கவனித்து வருவதாகவும் அமெரிக்க ஏகாதிபத்தியம் தனது ஆக்கிரமிப்பை நிறுத்தாத வரை அமெரிக்க ஆக்கிரமிப்புக்கு எதிரான யுத்தத்தில் வியட்நாம் மக்களுக்கும் மற்ற இந்தோ சீன மக்களுக்கும் இறுதி வெற்றி பெறும்வரை சீனமக்கள் முழு ஆதரவும் உதவியும் அளிப்பார்கள் என்றும் சீனஅறிக்கை அறிவித்துள்ளது.

அமெரிக்க அரசாங்கத்தின் நடவடிக்கையைக் காட்டுமிராண்டித்தனமானது என்று சீன அறிக்கை கண்டித்துள்ளது. வடவியட்நாம் மீது குண்டு வீச்சை நிறுத்த அனைத்தையும் செய்யும் என்றும் அது எச்சரித்துள்ளது.

# வடவியட்னும் மீது அமெரிக்காவின் காட்டுமிராண்டித்தாக்குதல் நின்றது

சைகோன், டிச, 31—

**வட வியட்நாம் மீது கடந்த 5 நாட்களாக 1000-க்கு மேற்பட்ட தடவை வெறித்தனமாக விமானத் தாக்குதல் நடத்திய அமெக்கா, தனது தாக்குதலை நேற்று நிறுத்திக் கொண்டது. இதுவரை 14விமானங்களை அமெரிக்கா இழந்தது. நேற்று ஒரே நாளில் மட்டும் 8 அமெரிக்க விமானங்கள் சுட்டுவீழ்த்தப்பட்டன.**

அமெரிக்காவின் இந்தத் தாக்குதலில் பெரும் பகுதி வடக்கு, தெற்கு வியட்நாமிடையே ராணுவ சூன்ய மண்டலத்துக்கு வடக்கேயும், 18-வது அக்ஷரேகைக்கு தெற்கேயும், தரையிலிருந்து விமானத்தைத் தாக்கும் ஏவுகணைத் தளங்கள், விமான எதிர்ப்பு பீரங்கி தளங்கள், விமான தற்காப்பு ராடார் நிலையங்கள், வட வியட்நாம் ராணுவ முக்கியத்துவம் வாய்ந்த பகுதிகள்மீது அமெரிக்கா குண்டு வீசியது. மற்றும் ராணுவ சூன்யமண்டலத்துக்கு வடக்கே உள்ள வட வியட்நாம் எண்ணெய் கிடங்கு பகுதிகள் மக்கள் வாழும பகுதிகள் ஆகியவற்றின்மீதும் அமெரிக்க விமானங்கள் குண்டு வீசின. ஹனோய்க்கு 24 மைல் தூரத்தில் தெற்கே 20-வது அக்ஷரேகை வரையில் சில வட வியட்னாம் விமானங்கள் தாக்கப்பட்டன.

வட வியட்னும் மீதான அமெரிக்காவின் நீசத்தனமான தாக்குதல், கடந்த 3 ஆண்டுகளில், இப்போது நடந்தது மிகவும் வெறித்தனமானதாகும் விமானப் படை விமானங்களாலும் கடற்படை ஜெட் விமானங்களாலும் ஆயிரத்துக்கு மேற்பட்ட தாக்குதல்களை அமெரிக்கா தற்போது வட வியட்நாம் மீது நடத்தியது. வட வியட்நாம் வீரர்கள் எதிர்த்தாக்குதல் நடத்தி 14 அமெரிக்க விமானங்களைச் சுட்டு வீழ்த்தினர். விமானிகள் பலர் கொல்லப்பட்டனர் அல்லது சிறை பிடிக்கப்பட்டனர்'- என்று வடவியட்நாம் அரசு கூறியது

## வடவியட்நாம் அறிக்கை

பாரிஸ், டிச. 31 —

வடவியட்நாம் மீது அமெரிக்கா மேற்கொண்ட புதிய தாக்குதல் பதட்டத்துடன் கூடிய போர் விஸ்தரிப்புக் குற்றமாகும் என்று வியட்நாம் அரசு கண்டித்தது. இந்தோ-சீன முழுதும் பூரண வெற்றிக்குக கடைசிவரை போராடுவதென்ற வியட்நாமின் உறுதிப்பாட்டை இது மேலும் கடுமையாக்கி விட்டது என்று அது கூறியது. டிசம்பர் 26 முதல் தினசரி தொடர்ந்து விமானங்கள் மூலம் அமெரிக்கா குண்டுகள் வீசி தாக்கியதானது இதுவரை கேள்விப்பட்டிராத காட்டுமிராண்டித்தனமான- படு மோசமான குற்றமாகும்.

அமெரிக்க ஆக்கிரமிப்பாளர்களின் ரத்தம் தோய்ந்த கரங்களைத் தடுத்து நிறுத்த உலகக் கம்யூனிஸ்டு நாடுகள் அதிக அளவில் தங்கள் ராணுவ உதவியை அளிக்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டது.

அமெரிக்க விமானத் தாக்குதலையடுத்து, பாரிசில் நடந்து வந்த சமாதானப் பேச்சுகளை வடவியட்னும் தூதுக் குழு தற்காலிகமாக நிறுத்திவிட்டபின் அதன் வெளிநாட்டு அமைச்சின் இந்தஅறிக்கையைபாரிசில் இத்குழு வெளியிட்டுள்ளது.

ஊர்வலத்தில் தி. மு. க. தாக்குதல்

# பஞ்சாயத்து யூனியன் தலைவர்மீது நடவடிக்கை எடுக்கவும்

## கே. பி. ஜானகிஅம்மாள் அறிக்கை

மதுரை, டிச. 31—

மதுரை மாவட்டம், மதுரை வட்டம் சமயநல்லூரில் வட்டக்குழு சார்பில் 30-12-71 தேதியில் பங்களா தேஷ் ஆதரவு ஊர்வலம் பொதுக் கூட்டம் நடத்த ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

காலையில் தொழிற்சங்க உதவி செயலாளர் என். ஆர். பழனிச்சாமி அவர்களையும் மாலையில் 4மணிக்கு கிளைசெயலாளர் அருளப்பனையும் போலீஸ் ஸ்டேஷனிற்கு சர்க்கிள் இன்ஸ்பெக்டர் கூப்பிட்டு இன்று ஊர்வலம் நடத்த வேண்டாம், என்றும்கூட்டத்தில் தி மு.காவை கண்டித்துப் பேசக்கூடாது என்றும், மீறிப் போட்டால் தி. மு. க. வினர் கலகம் செய்வார்கள் போல் தெரிகிறது என்றும் கூறியுள்ளார்.

இதற்கு போலீஸ் ஸ்டேஷன் சென்றிருந்த இரண்டு தோழர்களும் நிச்சயம் செய்தகூட்டம் ஊர்வலம் நடைபெறும். ஊர்வலம் கூட்டம் நடத்தும் எங்கள் உரிமையையும் சட்டப்படியான எங்கள் பேச்சுரிமையையும் நாங்கள் விட்டுக் கொடுக்க முடியாது எனவும் நமது தோழர்கள் போலீஸில் கூறிவிட்டார்கள்.

மாலை 6 மணிக்கு ஊர்மெச்சி குளம் திடலிலிருந்து சுமார் 350 தொழிலாளர்கள், விவசாயிகளுடன் ஊர்வலம் புறப்பட்டது.

ஊர்வலத்தில் பங்களாதேஷ் வாழ்க, அமெரிக்க 7வது கடற்படையை வாபஸ் வாங்கு, அமெரிக்க ஏகாதிபத்தியமே வியட்நாமை விட்டு வெளியேறு, அமெரிக்க மூலதனத்தை பறிமுதல் செய்; தி. மு க. வன்முறையை கண்டிக்கிறோம். எங்களை தாக்கியவர்கள் மீது நடவடிக்கை எடு, புதியவரிகளை ரத்துசெய் என்று கோஷித்துக்கொண்டு சென்றார்கள்.

ஊர்வலம் ஒருபர்லாங்கு கடந்து கடை வீதியில் செல்லும் பொழுது பள்ளிக்கு எதிர்புறத்திலிருந்து சுமார் 50, 60 பேர்கள் பயங்கர ஆயுதங்களுடன், ஊர்வலத்தில் சென்றவர்களைப் பார்த்து கேவலமான வார்த்தைகள் பேசியும் கட்சியை இழிவு படுத்தி பேசியும் ஊர்வலத்தில் குறுக்கிட்டார்கள். ஆத்திர மூட்டலுக்கு பலியாகாமல் ஊர்வலம் சென்று கொண்டே இருந்தது. அவர்கள் தொடர்ந்து ஊர்வலத்தை கலைக்க சகல முயற்சிகளும் செய்தார்கள். கூட்டம் நடக்கும் திடலை வந்தடையும்போது ஒருவர் வந்து கூட்டத்தை நடத்தக் கூடாது என்று கூறிக்கொண்டு மறித்தார்.

பின் ஊர்வலம் திடலை அடையும்பொழுது ஊராட்சி மன்றத்தைச் சேர்ந்த குப்பை வண்டி சக்கரங்களை சுழற்றி விட்டு மேடை முன் குப்பைகளை கொட்டி விட்டு வண்டியையும்கவிழ்த்துபோட்டிருந்தார்கள். மைக் செட் போடுபவரை பயமுறுத்தி போடவிடாமல் நிறுத்தி விட்டார்கள். மைக் செட்டை அடித்து நொறுக்க முயற்சி செய்திருக்கிறார்கள்.

கூட்டம் ஆரம்பிக்கப்பட்டு கே. பி. ஜானகியம்மாள்பேசிக் கொண்டிருக்கும் பொழுது நான்கு பக்கங்களிலிருந்தும் அவர்கள் ஏற்கனவே திட்டமிட்டுள்ளபடி குவித்து வைத்திருக்கும் செங்கல் கற்களாலும் கருங்கற்களாலும் சரமாரியாக எறிந்து கொண்டே இருந்தார்கள். கல் எறியால் சகுஜி என்பவருக்கும் மற்றும் இரண்டு பேருக்கும் தொழிற் சங்க செயலாளர் என் ஆர். பழனிச்சாமிக்கும் ரத்தக் காயங்கள் ஏற்பட்டன.

**தி. மு. க. வினரின் திட்டமிட்ட தாக்குதல்**

சமயநல்லூர் ஊராட்சி மன்ற தேர்தல் நடந்து, தி.மு.க. துரைராஜ் என்பவர் வெற்றி பெற்றதிலிருந்து இந்த கிராமத்தில், வேறு கட்சிகள் குறிப்பாக, மார்க்சிஸ்ட் கட்சி இருக்ககூடாது என்று பல தாக்குதல்களை நடத்தியுள்ளார்.

1. தேர்தல் முடிந்தவுடன்

( 4-ஆம் பக்கம் பார்க்க )

சமயநல்லூரில்

## பங்களாதேஷ் வெற்றிவிழாவில் தி. மு. க. வினர் வெறியாட்டம்!

மதுரை, டிச. 31—

மதுரையை அடுத்த சமயநல்லூரில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் நேற்று பங்களாதேஷ் வெற்றி விழாக் கொண்டாட்டம் நடைபெற்றது. இதையொட்டி நடைபெற்ற ஊர்வலத்தையும் பொதுக் கூட்டத்தையும் நடத்த விடாமல் கலைக்க தி மு க.வினர் முன் கூட்டி திட்டமிட்டனர்.

ஊர்வலம் கடை வீதியில் வந்து கொண்டிருக்கும் போது பக்கத்துத் தெருக்களில் இருந்து தி மு.க. வினர் தடிக்கம்புகளுடன்வந்து ஊர்வலத்தினர் மீது தாக்க முயற்சித்தார்கள். இருந்த போதிலும், இந்த ஆத்திர மூட்டலுக்குப் பலியாகாமல் ஊர்வலத்தினர் அமைதியைக் கடைப்பிடித்தனர்.

பொதுக் கூட்டத்திலும் தி மு. க. வினர் கல் வீசி கலகம் செய்தனர்.

இந்த ஆத்திரமூட்டலுக்குப் பலியாகாமல் கூட்டம் அமைதியாக நடந்தது.

தி. மு. க. வினரின் இந்த வன்முறைப் போக்கைக் கண்டித்து மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மதுரை வட்டக் குழுச்செயலாளர் தோழர் கே. பி. ஜானகியம்மாள் ஓர் அறிக்கை விடுத்துள்ளார்.

தீக்கதிர்

## மாநில சட்ட மன்றங்களுக்குத் தேர்தல்

7 மாநில சட்டமன்றங்களுக்கும் ஒரு யூனியன் பிரதேசத்துக்கும் மார்ச் 5-ம் தேதியிலிருந்து 11-ம் தேதி வரை தேர்தல் நடைபெறும் என்று தேர்தல் கமிஷன் அறிவித்துள்ளது.

ஜனுதிபதி ஆட்சியின் கீழிருக்கும் குஜராத், பஞ்சாப், மைசூர், மேற்கு வங்கம், மணிப்பூர், திரிபுரா மாநிலங்களுக்கு தேர்தல் நடத்துவது சம்பந்தமாக மத்திய அரசாங்கத்திடமிருந்து தாக்கீது எதுவும் வரவில்லை என்றும் தேர்தல் கமிஷனர் அறிவித்துள்ளார்.

டிசம்பர் 3-ம் தேதி இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்குமிடையே யுத்தம் மூளுவதற்கு முன்பாக மத்திய அரசு அறிவித்திருந்த திட்டத்தின்படி மேற்கு வங்கத்தைத்தவிர மற்ற மாநிலங்களுக்கு பிப்ரவரி மாதம் தேர்தல் நடைபெறும் என்று அறிவிக்கப்பட்டிருந்தது.

மேற்கு வங்கத்தில் அரைப் பாசிஸ்ட் ஆட்சி நடத்தும் இந்திரா அரசுக்கு அங்கு தேர்தல் நடத்த துணிவில்லாததால் அகதிகள் வந்திருப்பதைக் காட்டி அங்குமட்டும் தேர்தல் நடத்த மறுத்தது.

இப்போது யுத்தம் முடிந்து பங்களாதேசத்துக்கு ஆயிரக்கணக்கில் அகதிகள் திரும்பிக்கொண்டிருக்கின்றனர். இந்திய படைகளின் தளபதி மானேக்ஷா பிப்ரவரி மாதத்துக்குள் அகதிகள் திரும்பிவிடுவார்கள் என்று அறிவித்துள்ளார்.

மேகாலயா மாநிலத்தில்தான் அதன் ஜனத்தொகை விகிதத்துக்கு அதிக எண்ணிக்கையில் அதிக அகதிகள் வந்திருந்தும் அம்மாநிலத்திலும் தேர்தல் நடத்தவும் இந்திய அரசாங்கம் முன்பே திட்டமிட்டிருந்தது. அதுபோல் அசாமிலும் தேர்தல் நடத்த முன்வந்தது.

அகதிகள் இப்போது திரும்பிக்கொண்டிருக்கும் நிலையிலும் மேற்கு வங்கத்தில் தேர்தல் நடத்துவது பற்றி இந்திய அரசாங்கம் இன்னும் அறிவிப்பை வெளியிடவில்லை

மாநில சட்டமன்றங்களுக்கான தேர்தலை ஓராண்டுக்கு ஒத்திப்போட்ட இந்திரா அரசு இப்போது தேர்தலை நடத்தமுன் வந்துள்ளது.

பங்களாதேச வெற்றியை தங்களுக்குச் சாதகமாகப்பயன்படுத்திக்கொள்ள முடியும் என்று இந்திரா காங்கிரஸ் தலைவர்கள் நம்புகின்றனர்.

இந்நிலையில் 1974 வரை பதவிக்காலம் முடியாதிருக்கும் உ. பி. மாநிலத்திலும் பீகார் மாநிலத்திலும் சட்டமன்ற தேர்தல் நடத்தவேண்டும் என்ற கோரிக்கை இந்திரா காங்கிரஸ் வட்டாரத்தில் எழுந்துள்ளது.

பங்களாதேசப் போராட்டத்தின் வெற்றியை இந்திரா காந்தியின் தனி வெற்றியாகக் காட்டும் பிரசாரம் ஏற்கனவே முடுக்கிவிடப்பட்டுள்ளது.

இந்தப் பிரசாரத்தில் நாடாளுமன்ற இடைத்தேர்தல் சமயத்தில் கொடுத்த வாக்குறுதிகளை நிறைவேற்றத் தவறியதையும் மற்ற மக்கள் விரோத நடவடிக்கைகளையும் மறைத்துவிடலாம் என்று இந்திரா காங்கிரஸ் அரசு நம்புகிறது.

மேற்கு வங்கத்தில்கூட இப்போதுதான் தேர்தல்நடத்தச் சரியான நேரம் என்று அந்த மாநில இந்திரா காங்கிரஸ்கமிட்டி கூறுகிறது.

மாநில சட்டமன்றங்களுக்கு இப்போது தேர்தல் நடத்துவதை எதிர்கட்சிகள் வரவேற்றுள்ளன.

ஆனால் அவசரகால நிலைமையின் கீழுள்ள அதிகாரங்களை அரசாங்கம் துஷ்பிரயோகம் செய்யும் சூழ்நிலையில் நேர்மையான தேர்தல் நடைபெறும் என்ற நம்பிக்கைக்கு இடமில்லை.

நேர்மையான தேர்தல் நடைபெறுவதற்கு அவசரகால நிலைமை உடனே ரத்துசெய்யப்படவேண்டும்.

அண்மையில் பர்துவான் நகரசபைக்கு எவ்விதம் தேர்தல் நடைபெற்றது?

வாக்கெடுப்புக்கு ஒருவாரத்துக்கு முன்பாக 15-மார்க்சிஸ்ட் கட்சி ஊழியர்கள் படுகொலை செய்யப்பட்டனர். 2000 பேர் சிறைபிடிக்கப்பட்டனர்.

இந்திரா காங்கிரஸ் ஆட்சியிலுள்ள மற்ற மாநிலங்களிலும் அடக்குமுறை கட்டவிழ்த்துவிடப்பட்டுள்ளது. ஆந்திரத்தில் அரசியல் காரணங்களுக்காக 4000 பேர் வழக்குகளில் ஈடுபடுத்தப்பட்டுள்ளனர்.

இந்நிலையில் அவசரகால நிலைமையை வைத்துக்கொண்டு தேர்தல் நடைபெறுவது நேர்மையான தேர்தலாக இருக்க முடியுமா?

நாடு முழுவதுக்கும் அவசரகால நிலைமையை வைத்துக் கொண்டிருக்க வேண்டிய அவசியமில்லை என்பதை பிரதமமந்திரி இந்திரா காந்தியே ஒப்புக்கொண்டிருக்கிருர்.

மேற்கு வங்கத்திலும், திரிபுராவிலும் இந்திரா காங்கிரஸ் பலவீனமாக இருப்பதால் அங்கு அவசரகால நிலைமையை தொடர்ந்து வைத்துக்கொண்டிருக்க வேண்டுமென்று மத்திய அரசு விரும்புகிறது. இதற்காக அரசியல் சட்டத்தைத் திருத்துவதற்கு இந்திரா அரசுசெய்த முயற்சிகளை எதிர்கட்சிகள் தடுத்துள்ளன.

நாடு முழுவதுக்கும் தேர்தல் நடத்துமளவுக்கு சகஜநிலை திரும்பியிருப்பதாகக் கருதப்படும்போது இந்திரா அரசு அவசரகால நிலைமையை ரத்துசெய்யாததேன்?

அவ்வாறு செய்யாமல் தேர்தலை நடத்துவது ஜனநாயகத்தின் பெயரால் செய்யப்படும் கேலிக்கூத்தாகத்தான் இருக்கும்.

# பங்களா தேசத்தின் தோற்றம் அமெரிக்கக் கொள்கைக்கு பேரடி!

## மார்க்சிஸ்ட் கட்சி அரசியல் தலைமைக் குழு அறிக்கை!

**பாகிஸ்தானின் இராணுவ ஆட்சியினின்றும் தங்களை விடுவித்துக் கொள்வதில், மகத்தான வெற்றியைப் பெற்று, பங்களா தேசத்தின் சொந்த சுதந்திர அரசையும் நிறுவியுள்ள பங்களா தேச மக்களை இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)யின் அரசியல்தலைமைக்குழு (பொலிட் பீரோ)பாராட்டியுள்ளது**

**பத்திரிகைகளுக்கு அது விடுத்துள்ள அறிக்கையின் முழு விபரம் வருமாறு:**

பங்காள தேச உதயமானது இந்த உபகண்டத்தின் வரலாற்றில் ஒரு திருப்பு முனையாகும்.

பாகிஸ்தானை செண்டோ சியாட்டோ, இராணுவக் கூட்டணிகளில் இழுத்து விட்டும்—பாகிஸ்தானுக்கு தூக்கமட்டும் ஆயுதங்களைச் சுமத்தியும்—பாகிஸ்தானுக்கும், இந்தியாவுக்கு மிடையே பகைமைத்தீயை விசிறி விட்டும்—வந்த அமெரிக்காவின் கொள்கைகளெல்லாம் பங்களா தேசம் தோன்றியதின் மூலம், படுதோல்வியடைந்து விட்டன. அது மட்டுமல்ல. இந்தப் பிரதேசத்தில் நிலவிவந்த வகுப்புவாத சக்திகளுக்கும்கூட இது ஒரு பெரும் அடியாகும்.

### வீரதீரமான போராட்டம்

மேற்கு பாகிஸ்தானைச் சேர்ந்த பெருமுதலாளிகளும் நிலப்பிரபுக்களும் ஆதிக்கம் செலுத்துகிற பாகிஸ்தான் ஆட்சியாளரின் கொடுங்கோன்மைகளை எதிர்த்துகடந்த 20 ஆண்டு காலமாக பங்களா தேசமக்கள் போராடிவந்தனர் சகல ஜனநாயக உரிமைகளையும்பறித்துவிட்ட சூழ்நிலையில் சகல குடியுரிமைகளையும் பறித்துவிட்ட ஒரு சூழ்நிலையில்—அடுத்தடுத்து வந்த பல ஆட்சி பீடங்களும் தொடர்ந்து ஒடுக்குமுறைகளை ஏவிவிட்ட போதிலுங்கூட—மேற்கு பாகிஸ்தானின் மிருகத்தனமான சுரண்டலை எதிர்த்தும், தேசிய இன ஒடுக்குமுறையை எதிர்த்தும், தங்களுடைய மொழியையும், பண்பாட்டையும், பாரம்பரியத்தையும் நசுக்கும் முயற்சிகளை எதிர்த்தும் பங்களாதேசமக்கள்வீரமுடன் போராடினுர்கள். தங்களுடைய ஜனநாயக உரிமைகளையும் குடியுரிமைகளையும் நிலை நாட்டுவதற்காகவும், மாநில சுயாட்சிக்காகவும் பங்களா தேச மக்கள், மீண்டும் மீண்டும் எதிர்வந்த அடக்குமுறைகள் அத்தனையையும் எதிர்த்துப் போராடினுர்கள்.

### மக்கள் விருப்பமும் யாகியா போக்கும்

1970 டிசம்பரிலே, தேர்தல் வைக்கவேண்டிய கட்டாயம் யாகிகானுக்கு ஏற்பட்டபோது அந்தத்தேர்தலில், பங்களா தேச மக்கள் தங்களுடைய விருப்பங்கள் முழுவதையும் வெளியிட்டார்கள். ஆனுல் மக்களின் இந்தத் தீர்ப்பை, இராணுவ சர்வாதிகாரி தன் காலில் போட்டுத் துவைத்தான்.

1971 மார்ச் மாத ஆரம்பத்தில், யகியா அரசாங்கத்தின் உத்திரவுகள் எதுவும் செல்லுபடியாகாத அளவுக்கு பங்காள தேச மக்களின் ஒற்றுமையும் ஐக்கியமும் ஓங்க நின்ற காலத்திலே-பங்களா தேச மக்கள் அனைவர் மீதும் யாகியாகான் இராணுவப் படைகளை ஏவிவிட்டான். 10 லட்சத்திற்கு மேற்பட்ட மக்களைக் கொன்று குவித்தான்; தாய்க்குலம் அவமானப்படுத்தப்பட்டது; கிராமங்களெல்லாம் நாசமாக்கப்பட்டன. அகதிகளாக, அநாதைகளாக, 100 லட்சம் மக்கள் இந்தியாவுக்குள் துரத்தியடிக்கப்பட்டார்கள்.

### மார்க்சிஸ்ட் கட்சியின் வேண்டுகோளும் இந்தியஅரசின் தயக்கமும்

இப்படிப்பட்ட சூழ்நிலையில்தான் பங்களா தேச தற்காலிக சுதந்திர அரசாங்கம் அமைக்கப்பட்டது இப்படிப்பட்ட சூழ்நிலையில்தான் பங்களாதேச மக்கள் ஆயுதம் ஏந்தினுர்கள்; இப்படிப்பட்ட சூழ்நிலையில்தான், பங்களா தேசத்திற்குள் புகுந்த பாகிஸ்தான் படைகளை எதிர்த்து வீரதீரமாகப் போர் புரிந்தார்கள்.

அப்பொழுதுதான் நம்முடைய கட்சியானது, இந்திய அரசாங்கம், உடனடியாக பங்களாதேச அரசாங்கத்தை அங்கீகரிக்க வேண்டுமென்று கோரினேம்; போராடும் சுதந்திரப் போராட்ட வீரர்களுக்கு அனைத்து உதவிகளும் அளித்திட வேண்டும் என்றும் கோரினேம். ஏகாதிபத்திய எதிர்ப்பு பரம்பரையும், ஜனநாயக உள்ளமும், மதச்சார்பற்ற மனப்பாங்கும் உள்ள நமது நாட்டு மக்கள் அனைவரும் இந்தக் கோரிக்கையையே புழுவேகத்துடன் எதிரொலித்தனர், சுதந்திரப் போராட்ட வீரர்களுக்கு முழு மூச்சுடன் ஆதரவு தரவேண்டுமென்றும், பங்களா தேச தற்காலிக அரசுக்கு அங்கீகாரம் அளித்திட வேண்டுமென்றும் வற்புறுத்தினுர்கள்.

ஆரம்பத்தில் இந்திய அரசாங்கம் தயங்கலாயிற்று: ஊசலாடிற்று; அப்புறம் நாடு நாடு முழுவதும் ஒரே குரலாக கோரிக்கை எழுந்ததைக் கண்ட பிறகுதான், இந்திய அரசாங்கம் இணங்க முற்பட்டு சுதந்திரப் போராட்ட வீரர்களுக்கு உதவி புரியமுன்வந்தது இந்த உதவிகளானது, யாகியாகானின் இராணுவப் படைகளை எதிர்த்து, தங்களுடைய போராடத்தைத் தீவிரப் படுத்துவதற்காக, சுதந்திரப் போராட்ட வீரர்களுக்குத் துணிவைக் கொடுத்தது.

இதனுல்தான், நம் நாட்டின் மேல், யாகியாகான் யுத்தத்தைத் திணித்தான். அதற்குப் பிறகுதான், இந்தியாவின் ஆயுதப் படைகள் சுதந்திரப் போராட்டத்துக்கு ஆதவாக, பங்களா தேசத்துக்குள் புகுந்து, முக்திபாகினியுடனும், மற்றும் பாகிஸ்தான் இராணுவப் படைகளை எதிர்த்துப் போராடும் இதர சக்திகளுடனும் கை கோர்த்து நின்றன.

வீரதீரமிக்க சுதந்திர சக்திகளும், இந்திய ஆயுதப் படைகளும் வங்காள தேசத்தில், யாகியாகானின் இராணுவத்தை சரணடையச் செய்து துரித வெற்றியைப் பெற்றது எப்படி சாத்தியமாயிற்று? இவர்களுக்கு எப்படி சாத்தியமாயிற்று என்ருல், வங்காள தேச மக்கள் அனைவரும் இவர்கள் பின்னுல் நின்ருர்கள்; ஆக்கிரமிப்புப் படைகளுக்கு எதிரான போராட்டத்தில், தம்மாலான உதவிகள் அனைத்தையும் எல்லா வழிகளிலும் இவர்களுக்குச் செய்தார்கள்.

இதுபற்றி நமது கட்சி என்ன கூறியது? வங்காள தேச விடுதலைக்கு உதவுவது மாத்திரமே நமது லட்சியமாக இருக்க வேண்டுமென்றும்—பாகிஸ்தான் மீது எந்த விதமான பிரதேச ஆசையும் வைத்துக் கொள்ளக் கூடாது என்றும் நமது கட்சி பிரகடனம் செய்தது. இதுதான் இந்தியாவின் குறிக்கோள் என்றும் பாகிஸ்தான் பிரதேசத்தின்மீது ஆசை ஏதுமில்லை யென்றும் இந்தியப் பிரதமர் பிரகடனம் செய்ததையும் பொலிட் பீரோ கவனத்தில் எடுத்துக் கொண்டது.

பங்களா தேசத்திலுள்ள பாகிஸ்தான் படைத் தலைமை சரணுகதி நிபந்தனைகளை ஏற்றுக்கொண்ட பிற்பாடு-இந்திய அரசாங்கமானது தாமாகவே போர் நிறுத்தம் செய்யவும் வங்காள தேசத்தின் யதார்த்தத்தை ஒப்புக் கொள்ளும் அடிப்படையில், இரு நாடுகளுக்கிடையேயும் நிலையான சமாதானம் நிலவ பேச்சுவார்த்தை நடத்தவும் தயார் என்று முன் வந்ததையும் கண்டு, பொலிட் பீரோ திருப்தி தெரிவித்தது.

ஆயினும், ஜனசங்கத்தினரும் சில காங்கிரஸ் மந்திரிகளும், 'மேற்கு பாகிஸ்தானில் யுத்தம் நடந்த போது இந்தியப் படைகள் கைப்பற்றிய இடங்களிலிருந்து வாபஸ் பெறக் கூடாதென்று கோருகின்ருர்கள். இந்தக் கோரிக்கையானது, இந்திய அரசாங்கம் பிரகடனப்படுத்திய லட்சியத்திற்கே விரோதமானதாகும். இது குறித்து பொலிட்-பீரோ, நமது நாட்டு மக்களுக்கு எச்சரிக்கை விடுகிறது. இந்தகூட்டத்தாரின்சொற்படி கேட்டால், அது இந்திய மக்களுக்கும் பாகிஸ்தான் மக்களுக்கும் இடையே கசப்புணர்ச்சியையும் பகைமையையும் நீடிக்கச் செய்வதில் தான் கொண்டு போய்விடு மென்று பொலிட்பீரோ எச்சரிக்கிறது. அதனுல், இதைச் சாக்கிட்டு ஏகாதிபத்யவாதிகள் இந்த உபகண்டத்தின் விவகாரங்களில் தலையிடுவதற்கு உதவி புரிந்ததாகி விடுமென்றும் பொலிட் பீரோ எச்சரிக்கை செய்கிறது. மேலும், வங்காள தேசத்திலேயே வகுப்புவாத சக்திகள் மீண்டும் தலைதூக்குவதற்கும் இந்தியா முழுவதுமுள்ள மக்களின் நல்லெண்ணத்தையும், பங்களாதேச மக்கள் அனைவரின் விரிந்த நல்லெண்ணத்தையும் சிதறடிப்பதற்கும் — இந்தக் காரியங்கள் வழி வகுத்து விடுமென்றும் பொலிட்பீரோ எச்சரிக்கை செய்தது.

### ஜனநாயக வளர்ச்சியை துரிதமாக்கும்

பாகிஸ்தான் மக்களும் ஒரு விஷயத்தை உணருமாறு பொலிட்பீரோ வேண்டுகோள் விடுகிறது. பங்களாதேசம் உதயமாகியிருப்பதின் மூலம், பாகிஸ்தானிலேயே ஜனநாயக வளர்ச்சியைத் துரிதப்படுத்தும் என்பதையும்—மேற்கு பாகிஸ்தான் மக்களை அடக்கி ஒடுக்கி சுரண்டிக் கொண்டிருக்கும் பெரு முதலாளிகளையும், நிலப்பிரபுக்களையும் எதிர்த்து நடைபெறும் போராட்டத்துக்கு உதவியாக இருக்குமென்பதையும் பாகிஸ்தான்மக்கள்உணருமாறு பொலிட்பீரோ வேண்டுகிறது. மேலும் பாகிஸ்தான் மக்கள், ஜனநாயகத்திற்காகவும், பொருளாதாரச் சுரண்டலை எதிர்த்தும் நடத்தவேண்டிய போராட்டத்தை திசை திருப்பி விடுவதற்காக மாத்திரமே— இராணுவ ஆட்சியானது, இந்தியாவை வெறுக்கும்படியான வகுப்புவாதத்தைக் கிளறிவிட்டது என்பதை உணருமாறு பாகிஸ்தான் மக்களுக்கு பொலிட் பீரோ வேண்டுகோள் விடுக்கிறது.

இந்திய மக்களும் பாகிஸ்தான் மக்களும் சுமுகமாகவும் நட்புறவுடனும் வாழ்ந்தே தீரவேண்டும்; ஏகாதிபத்யவாதிகளும் அவர்களுடன் கூடிக் குலாவுகிறவர்களுடன் செய்து வரும் தில்லுமுல்லுகள் இல்லாதபடி, இந்த உபகண்டத்தைச் சுத்தப்படுத்துவதற்காக, பாகிஸ்தானிலுள்ள ஜனநாயக இயக்கங்களும் இந்தியாவிலுள்ள ஜனநாயக இயக்கங்களும்தங்களுக்கிடையே சகோதர பிணைப்புகள் ஏற்படுத்திக் கொள்ளவேண்டும். ஆகையால்தான், இரு நாடுகளுக்கு மிடையே நீடித்த சமாதானம் நிலவ வேண்டுமென்று பாகிஸ்தான் மக்களுக்கு கட்சியின் அரசியல்தலைமைக்குழுவேண்டுகோள் விடுகிறது.

### நவீன காலனி

நமது கட்சி ஆரம்பத்திலிருந்தே அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் நவீன காலனியாதிக்கம் பற்றி எச்சரித்து வந்துள்ளது. உதவிகள் என்ற பேராலும், கூட்டு மூலதனம் போட்டு ஒத்துழைப்பு உடன்படிக்கைகள் என்ற பேராலும் நவீன காலனி முறை புகுத்தப்படுவதைப் பற்றி தொடர்ந்து எச்சரிக்கை செய்து வந்துள்ளது. இந்திய அரசாங்கமோ நமது எச்சரிக்கைகளையெல்லாம் புறக்கணித்துவிட்டது. அதன் விளைவு என்ன? கொரியாவிலும், வியட்நாமிலும், லாவோசிலும், கம்போடியாவிலும் அமெரிக்காவின் ஆக்கிரமிப்புச் செயல்களை, இந்தியா திட்டவட்டமாகக் கண்

(4-ம் பக்கம் பார்க்க)

# மார்க்சிஸ்ட் ஊழியர்கள்மீது 4000 பொய் வழக்குகள்

## ஆந்திராவில் இந்திரா ஆட்சியின் அடக்குமுறை அட்டூழியங்கள்!

**அனுமக்கொண்டா, (ஆந்திரா) டிச, 30**

**மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் ஆந்திர மாநில மாநாடு, இம்மாதம் முதல் வாரத்தில் நடைபெற்ற போது, மாநிலச் செயலாளர் தோழர். எம். அனுமந்தராவ், ஆந்திராவில் நடைபெறும் அடக்குமுறைக் கொடுமைகளைப் பற்றி பின் வருமாறு விவரித்தார்.**

ஆந்திர மாநிலத்தில் நம் கட்சியின் வளர்ச்சியைத் தடுப்பதற்காக அரசாங்கமும், நிலப்பிரபுக்களின் குண்டர்களும் முக்கியமான தோழர்களை குறிவைத்து தாக்குகின்றனர். 1968ம் ஆண்டிலிருந்து, கடந்த இந்த மூன்ருண்டுகளில் 4000 பேருக்கும் அதிகமான தோழர்களை பல கிரிமினல் வழக்குகளில் மாட்டி சிறையில் தள்ளியுள்ளனர்.

இந்த மூன்ருண்டுகளில் கம்மம் தாலுகாவில் மட்டும் 15 சிறந்த தோழர்களை, உயர்ந்த வீரர்களை காட்டுமிராண்டித்தனமாக நிலப் பிரபுக்களின் அடியாட்களும், போலீசாரும் கொன்று குவித்தனர்.

### வழக்குகள்

நரசம்பேட்டைத் தாலுகாவில் 800 தோழர்களை கிரிமினல் வழக்குகளில் சிக்க வைத்து, அவர்களின் மீது நடவடிக்கை எடுத்துள்ளது.

சூர்யபேட்டை தாலுகாவில் 637 தோழர்களை 71கிரிமினல் வழக்குகளில் மாட்டி வதைக்கிறது.

நல்கொண்டா தாலுகாவில் 412 தோழர்களின் மீதும் சூர்நார் தாலுகாவில் 350 தோழர்களின்மீதும் கிரிமினல் வழக்குகளில் சிக்க வைத்துள்ளது.

கம்மம் தாலுகாவிலே, 47 வழக்குகளில் 750 தோழர்களை மாட்டி சித்தரவதைக்குள்ளாக்குகிறது.

மேலும் விஜயவாடா, கண்ணுவரம், தாதிப்பள்ளி, நெல்லூர் போன்ற பல பகுதிகளில் இம்மாதிரியான அடக்குமுறைச் செயல்களும், பலநூற்றுக்கணக்கான தோழர்களின் மீதும்வழக்குகளும்போடப்பட்டுள்ளன.

தெலிங்காணுவின் பல பகுதிகளிலும், கடற்கரையோர மாவட்டங்களிலும் மத்தியரிசர்வ் போலீசார் நிறுத்தப்பட்டுள்ளனர். பல தாலுகாக்களை அபாயகரமான பகுதிகள் என்று அறிவித்து மத்திய போலீசாரிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது. அதி தீவிரவாதிகள் என்று சொல்லி இதுவரை 200-க்கும் அதிகமான பேர்கள், போலீசாரின் முகாம்களில் சுட்டு வீழ்த்தப்பட்டுள்ளனர்.

### மாநிலக் கமிட்டி உறுப்பினர்கள் மீது வழக்கு

நம் கட்சியின் மூன்று மாநிலக் கமிட்டி உறுப்பினர்களை கொலைவழக்குகளில் சிக்கவைத்துள்ளது. எப்போதுமில்லாத முறையில் மூன்ருண்டுகளாகியும் அவர்களின் மீது போடப்பட்டவழக்குகள் விசாரணைக்கு எடுக்கப்படவில்லை.

இதுவரை கிட்டத்தட்ட நாலாயிரம் தோழர்களின் மீது வழக்குகள் போடப்பட்டுள்ளன.

இத்தனை கொடுமைகள்செய்தும் நம் கட்சியின் சிறப்பான வளர்ச்சியைத் தடுக்க முடியவில்லை. நம் கட்சி மேலும் மேலும் பலம் வாய்ந்த கட்சியாக வளர்ந்துகொண்டு வருகிறது.

### மாநாடு நடக்கும் போதே படுகொலைகள்

மாநாட்டைச் சீர்குலைக்க, நிலப்பிரபுக்களும், போலீசாரும் திட்டமிட்டு நம் கட்சியின் முக்கிய தோழர்களை தாக்கியுள்ளனர்.

டிசம்பர் 2-ம் நாள் கம்மம் தாலுகாவிலே, கூடுருபாளையம் கிராமத்திலே பி. வெங்கடேஷ்வரலு என்ற நம் கட்சி உறுப்பினரை, நிலப்பிரபுக்களின் அடியாட்கள் பட்டப்பகலில், பலர்பார்த்துக்கொண்டிருக்கையிலேயே படுகொலை செய்தனர்.

மாநாடு நடந்து கொண்டிருக்கும் போதே, அசோக் நகரிலே, நரசம்பேட்டை தாலுகா தலைவர்களை கொலை வழக்கில் சம்பந்தப்படுத்தி கைது செய்துள்ளனர்.

மாநாடு நடப்பதற்கு இரண்டு நசட்களுக்கு முன் சூர்யாபேட்டை, ஹோசூர் நகர் தாலுகாத் தலைவர்களை—நிலப் பிரபுக்களின் அட்டூழியங்களுக்கு எதிர்ப்புத் தெரிவித்தனர் என்பதற்காக கைது செய்துள்ளனர்.

இத்தனை கொடுமைகள், இத்தனை வழக்குகள், இத்தனை படுகொலைகள் செய்தும் நம் கட்சியின் பிரும்மரண்டமான வளர்ச்சியை தடுக்க முடிந்ததா? இல்லை! மாருக அவர்கள் நம்மீது அடக்குமுறையைத் தொடுக்கத் தொடுக்க நம் கட்சி மேலும் மேலும் பலம் வாய்ந்த கட்சியாக வளர்ந்து வருகிறது. விவசாயிகள், தொழிலாளர்கள், மாணவர்கள் மத்தியில் மிகுந்த செல்வாக்குப் பெற்ற கட்சியாக வளர்ந்து வருகிறது.

## ஆசிரியருக்கு வரையும் மடல்

### வேலையில்லாதவர்களிடம் பணம் பறிப்பதா?

ஐயா,

பள்ளியிலோ அல்லதுகல்லூரியிலோ படித்து முடித்துவிட்ட போதிலும், இளைஞர்களாகிய எங்களுக்கு வேலை கிடைப்பதில்லை.

டைப்ரைட்டிங் (தட்டெழுத்து) படித்தாலாவது வேலை கிடைக்கும் என்ற நம்பிக்கையில், தமிழக முழுவதும் என்னைப்போன்றபல் லாயிரக்கணக்கான இளைஞர்கள் தட்டெழுத்து பயிலுகின்றனர்.

தனியார்கள் நடத்தும் இந்தப்பள்ளிகள், பணம் பறிக்கும் நிலையங்களாகவே உள்ளன.

மாதம் ஒன்றுக்கு, இந்தப் பயிற்சிப் பள்ளிகள் லோயர் பரிட்சைக்கு 6 ரூபாயும், ஹையர் பரிட்சைக்கு 7 ரூபாயும், தினம் ஒருமணி நேரம் பயிற்சி கொடுப்பதற்கு வசூல் செய்கின்றன.

இதுதவிர தேர்வுக்கட்டணம் என்று 35 ரூபாயிலிருந்து 40 வரை வசூல் செய்கின்றனர். இப்பணத்தில் 8 ரூபாய்தான் தேர்வுக்கட்டணமாக கட்டவேண்டும். மீதிப் பணத்தை மிஷின் வாடகை என்று சொல்லி எடுத்துக்கொள்கின்றனர்.

மேலும், மெகானிசம் என்று சொல்லிவேறு 35ரூபாய் வசூல் செய்கிருர்கள். இப்பணத்தில் அரசுக்கு ஒன்றும் கட்டவேண்டியதில்லை. இப்படி வேலையில்லாமல் திண்டாடும் இளைஞர்களிடம் பணம் பறிக்கும் இந்த பயிற்சி பள்ளிகளின் மீது, சம்பந்தப்பட்ட அதிகாரிகள் தக்க நடவடிக்கை எடுப்பார்களா?

இப்படிக்கு,
ராஜராம்,
செங்கல்பட்டு.

# யார் ஆக்கிரமிப்பாளர்? இந்தியாவா? அமெரிக்காவா?

## மதுரை சர்வ கட்சிக் கூட்டத்தில் ஏ. பாலசுப்ரமண்யம் பேச்சு!

மதுரை, டிச. 30—
மாநிலம் முழுவதும் நடைபெற்ற பங்களாதேஷ் வெற்றி விழாவின் ஒரு பகுதியாக டிச 27ந்தேதி மதுரையில் ஊர்வலமும், தமுக்கம் திடலில் பொதுக்கூட்டமும் நடைபெற்றது.

பொதுக் கூட்டத்திற்கு, மதுரை மேயர் எஸ். முத்து தலைமை வகித்தார்.

மாநில முதலமைச்சர் மு. கருணாநிதி, மத்திய இரயில்வே அமைச்சர் அனுமந்தையா ஆகியோர் கலந்து கொண்டனர்.

### ஏ. பாலசுப்ரமணியம்

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் மாநிலச் செயலாளர் தோழர் ஏ. பாலசுப்ரமணியம் கலந்துகொண்டு பேசினார். அவர் பேசும்போது கூறியதாவது:—

வங்காள தேசத்தில் ஏற்பட்ட நிலைகண்டு ஆரம்ப காலத்தில் இருந்தே மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி வங்காளதேசத்தை அங்கீகரிக்க வேண்டும் என்று கூறிவந்தது. அமெரிக்கா இன்று நம்மை ஆக்கிரமிப்பாளர்கள் என்று கூறி வருகின்றது.

### அமெரிக்காதானே

யார் ஆக்கிரமிப்பாளர்கள்? ஜப்பானில் தமது படையை நிறுத்திவைத்திருப்பது அமெரிக்காதானே? தென்கொரியாவில் படை குவித்திருப்பது அமெரிக்காதானே? தென் வியட்னாமில் இன்னும் யுத்தத்தை நடத்திக் கொண்டிருப்பது அமெரிக்காதானே? தென் வியட்னாமில் தலையிட்டு பொம்மை அரசை வைத்திருப்பது அமெரிக்காதானே? கம்போடியாவில் இருப்பது அமெரிக்காதானே?

இந்தியாவை ஆக்கிரமிப்பு நாடு என்று கூறுகிறீர்கள்! உலகத்தில் 429 இடங்களில் சிறிய பெரிய விமானத் தளங்களை ஏற்படுத்த 18 லட்சத்திற்கும் அதிகமான துருப்புகளை வைத்து இருக்கும் அப்படிப்பட்ட அமெரிக்கா—உலகமெல்லாம் அசிங்கத்தை ஏற்படுத்திக் கொண்டிருக்கும் அமெரிக்கா நம்மைப்பார்த்து ஆக்கிரமிப்பாளர்கள் என்று கூறுகிறது.

### இந்தியாவின் மருத்துவத்தாய் பணி

இதைப் பற்றிக் கவலைப்படத் தேவையில்லை. வங்க மக்கள் நியாயத்திற்காகப் போராடினார்கள். இந்தப் போரில் நாம் மருத்துவத்தாய் பணிக்கும் வேலையைத்தான் பார்த்தோம். வங்கம் என்ற குழந்தை பிறந்து விட்டது.

இவ்வாறு அவர் பேசுகையில் குறிப்பிட்டார்.

மற்றும் சிண்டிகேட் காங்கிரஸ் சார்பில் கக்கன், வலது கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் கே. டி. கே. தங்கமணி, சோசலிஸ்ட் கட்சி சார்பில் தங்கையா பூபதி, தமிழரசு கழகம் சார்பில் மு. மாரியப்பன், முஸ்லிம் லீக் சார்பில் எஸ். எம். செரீப், சுதந்திராக் கட்சி சார்பில் எம். கே. ராமகிருஷ்ணன், பார்வர்ட் பிளாக் சார்பில் கந்தசாமி, ஏ. சிதம்பர முதலியார் எம். எல். சி. ஆர் வி. சாமிநாதன் எம். பி. அரசு ஊழியர் சங்கத்தின் மாநில உதவித் தலைவர் ஜே. எஸ். பரதன் ஆகியோர் பேசினர்.

# இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)யின் ஆந்திர மாநில 12வது மாநாடு!

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)யின் ஆந்திர மாநிலத்தின் 12வது மாநாடு டிசம்பர் 2ம் தேதி முதல் 5 வரை அனுமக் கொண்டாவில்(வாராங்கல்) சிறப்பாக நடைபெற்றது.

தோழர்கள் சுந்தரய்யா, பசவபுன்னையா, அரிகிருஷ்ண கோனார், எம்.ஆர். வெங்கட்ராமன் ஆகியோர் கலந்து கொண்டனர்.

மாநாட்டிற்காக சிறப்புற அமைக்கப்பட்ட ஹோ-சி-மின் நகரில், தோழர். சுந்தரய்யா செங்கொடி ஏற்றி வைக்க கோலாகலமாக ஆரம்பமாகியது.

தோழர் பசவபுன்னையா, தியாகிகள் சின்னத்திற்கு மலர் வளையம் வைத்து அஞ்சலி செலுத்தினார்.

மாநாட்டில் மாநிலம் முழுவதிலிருந்தும் 276 பிரதிநிதிகள் கலந்து கொண்டனர். அவர்களில் சில பிரதிநிதிகளின் மீது போலீஸ் வாரண்ட் பிறப்பித்திருந்ததால் கலந்து கொள்ளவில்லை. இரண்டு பெண் பார்வையாளர்களும் கலந்து கொண்டனர்.

### புதிய மாநிலக்குழு

தேர்ந்தெடுக்கப்பட்ட புதிய மாநிலக் குழுவில் 27 உறுப்பினர்கள் உள்ளனர். கட்சியின் சிறப்பான வளர்ச்சியின் அடிப்படையில், புதிதாக 10 பேர் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர். பழைய மாநிலக்குழுவில் 17 பேர்கள் தான் உறுப்பினர்கள்.

இப்புதிய மாநிலக் குழுவிற்கு தோழர் எம். அனுமந்தராவ் ஒரு மனதாகச் செயலாளராக தேர்ந்தெடுக்கப் பட்டார்.

தோழர்கள் எம். அனுமந்தராவ், என். பிரசாதராவ், எல். பி. கங்காதரரார்வ், உ. ராமம், பி. நரசிம்ம ரெட்டி, மணிக்கொண்டா சுப்பாராவ், பரசா சத்திய நாராயண, ஐ. நாராயண ராவ், ஜி.எஸ். பாலாஜூதாஸ் ஆகியோர் மாநில செயற்குழு உறுப்பினர்களாக தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர்.

தோழர் பசவபுன்னையா, மாநாட்டை துவக்கிவைத்து மத்தியக் கமிட்டி அறிக்கையை விளக்கிப் பேசினார்.

தோழர் சுந்தரய்யா, பங்களாதேசில் நமது நிலையைப் பற்றி விளக்கிப் பேசினார்.

### மாநிலக் கமிட்டி அறிக்கை

தோழர். எம். அனுமந்தராவ் மாநிலக் கமிட்டி அறிக்கையை சமர்ப்பித்து பேசினார். இந்த மூன்றாண்டுக் காலங்களில் நம் கடசி இந்த மாநிலத்தில் நடத்திய போராட்டங்களையும், நம் கட்சியின் வளர்ச்சியையும் பற்றி விளக்கினார்.

முக்கியமாக, தெலிங்கானா போராட்டத்தில், ஆந்திர மாநில ஒற்றுமைக்காக நம் கட்சிநிலைறதைசுட்டிக்காட்டிப் பேசினார்.

மார்க்சீய கொள்கையின் அடிப்படையில் சரியாக நின்றதனால், தனித்துநின்ற போதிலும் நாம் மகத்தான வெற்றியைப் பெறமுடிந்தது. நம் கட்சியும் சிறப்பான வளர்ச்சியடைந்துள்ளது.

1970ம் ஆண்டில் நடந்தபஞ்சாயத்து போர்டு தேர்தலில் நம் கட்சி 312 பஞ்சாயத்துக்களைப் பிடித்தது நமது தோழர்கள் 4 பஞ்சாயத்து சமிதிகளின் தலைவர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். 3 பஞ்சாயத்து சமிதிகளில் உதவித் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர். நமது தோழர் ஒரு ஜில்லா பரிசத்தின் உதவி சேர்மனாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்.

### விவசாயத் தொழிலாளர் போராட்டம்

விவசாயத் தொழிலாளர்களின் போராட்டத்தில் 3000 தொண்டர்கள் பிரசார வேலையில் ஈடுபட்டனர். ஹைதராபாத்தில் நடைபெற்ற ஆர்ப்பாட்டத்தில் முப்பதாயிரம் விவசாயத் தொழிலாளர்களும், மற்றும் பலரும் கலந்து கொண்டனர். நிலவினியோகம் பற்றி விவாதிப்பதற்காக 1969 லிருந்து 20 மாநாடுகள் கூட்டியுள்ளோம். இதில் 11,000 பிரதிநிதிகள் கலந்து கொண்டனர். 13 ஆர்ப்பாட்ட ஊர்வலங்கள் நடத்தியுள்ளோம்.

இதன் விளைவாக 200 கிராமங்களில் பத்தொன்பதாயிரம் ஏக்கர் நிலத்தை பிடிக்க முடிந்தது. ஒதுக்கப்பட்ட காட்டுப் பகுதிகளில் 1500 ஏக்கர் நிலத்தை பிடித்துளோம்.

71,600 பேருக்குப் பட்டா வழங்கச் செய்துள்ளோம். குண்டூர் ஜில்லாவில் ஆற்றுப் படுகையில் 1500 ஏக்கர் நிலத்தை கூட்டுறவுத் துறை மூலம் விவசாயத் தொழிலாளருக்குவினியோகிக்கச்செய்துள்ளோம். முன்பெல்லாம் இந்தநிலங்களைஏலம் போட்டுவிற்பனை செய்வார்கள் இதுபோல் பல மாவட்டங்களில் அயிரக்கணக்கானஏக்கர் நிலங்களை உழுபவர்களுக்கு கிடைக்கச் செய்துள்ளோம்.

### பீடித்தொழிலாளர் போராட்டம்

1971-ம் ஆண்டில், கம்மம்' சொத்தகூடம், பத்ராசலம் எல்லண்டு, நரசப்பேட்டை முலுக் தாலுக்காக்களில்எண்பதாயிரம் பீடித் தொழிலாளர்களின் ஒன்றுபட்ட உறுதியான போராட்டம் நடைபெற்றது.

அதன்விளைவாக அவர்களின் ஊதியம் கணிசமான அளவு உயர்த்தப்பட்டது.

அரசு ஊழியர்கள், சர்க்கரை ஆலைத் தொழிலாளர்கள், வனஸ்பதி தொழிலாளர்கள், ஓட்டல் தொழிலாளர்கள், கப்பல் கட்டும் தளத் தொழிலாளர் ஆகியோர் நடத்திய போராட்டங்களில் நம் கட்சி முக்கிய பங்கு வகித்தது.

இந்திய மாணவர் சங்கம், வியட்நாம் தினம், மேற்கு வங்க அடக்குமுறையைக் கண்டித்து நடத்திய ஆர்பாட்டங்கள் ஆகியவற்றில் சிறப்பான பங்கு வகித்தது.

### பெண்கள் குழு

பெண்கள் குழுவும் புத்துணர்ச்சி பெற்று, வேகமாக வளர்ந்து வருகிறது. குண்டூர், கிருஷ்ண, நல்கொண்டா. வாரங்கல் ஆகிய மாவட்டங்களில் மட்டும் 3,000-க்கும் மேற்பட்ட உறுப்பினர்கள் சேர்ந்துள்ளனர்.

### கட்சி வகுப்புகள்

இந்த மூன்றாண்டுகளுக்குள், கட்சி 39 முகாம்களில் வகுப்புகள் நடத்தியுள்ளது. இதில் 2,281 மாணவர்களும், தொழிற்சங்க ஊழியர்களும் பங்கெடுத்துக் கொண்டுள்ளனர்.

வளர்ந்துவரும் நம் கட்சியின் மீது கடுமையான அடக்குமுறை ஏவி விடப்பட்டுளளது. இதுவரை 4000 பேர்கள், கிரிமினல் குற்றம் சாட்டப்பட்டு சிறையில் அடைக்கப்பட்டுள்ளனர் என்று அந்த தீர்மானத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.

மற்றும் பங்களா தேஷ் விடுதலைப் போராட்டத்தை ஆதரித்தும், மேற்கு வங்கத்தில் போலீஸ், இரானுவத்தினரின் அடக்கு முறையைக் கண்டித்தும் தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டன.

### பொதுக்கூட்டம்

டிசம்பர் 5ந் தேதி மாநாட்டு முடிவில் நடைபெற்ற எழுச்சி மிக்க மாபெரும் பேரணியில் பல்லாயிரக்கணக்கான தொழிலாளர்களும், விவசாயிகளும் நடுத்தர மக்களும், மாணவர்களும் கலந்துகொண்டனர்.

அன்று மாலை நடந்த பிரும்மாண்டமான பொதுக்கூட்டத்தில் தோழர்கள் பசவபுன்னையர், அரிகிருஷ்ண கோனார், எம். ஆர். வெங்கட்ராமன், எம். அனுமந்தராவ், ஆகியோர் பேசினர்.

# சோவியத் யூனியனுக்கு என். ஜி. ஓ. சங்கம் பாராட்டு

சென்னை, டிச. 30—
இந்தியா—பாகிஸ்தான் போரில், இந்திய நாட்டிற்கு உதவியதற்காகவும், பங்களா தேச வெற்றிக்குத் துணைபுரிந்ததற்கும் சோவியத் யூனியனுக்கு தமிழ்நாடு அரசு ஊழியர்கள் சங்கம் சார்பில் மகிழ்ச்சியும் நன்றியும் தெரிவிக்கப் பட்டது.

சென்னையில் உள்ள சோவியத் தூதர் கிரைசெனோவை மாநிலத் துணைத் தலைவர் கோபாலகிருஷ்ணன், அமைப்புச் செயலாளர் சுப. சீதாராமன், பொருளாளர் எம். ஆர். சுப்பன் ஆகியோர் சந்தித்து நன்றியையும் வாழ்த்துக்களையும் தெரிவித்தனர்.

# அமெரிக்க குண்டு வீச்சு போரை விரிவுபடுத்தும் நடவடிக்கையே!

## ஹனோய் ரேடியோ அறிவிப்பு!

ஹனோய், டிச, 29—
தென் வியட்னாமிலுள்ள அமெரிக்கத் துருப்புகளை பாதுகாப்பதற்காகவே வடவியட்னாம் மீது அமெரிக்கா தீவிர விமானத் தாக்குதலில் இறங்கியிருப்பதாக அமெரிக்க தற்காப்பு மந்திரி கூறியிருக்கும் காரணம் பொய்யானது, வெட்கக் கேடானது என்று ஹனோய் ரேடியோ கூறியது.

அமெரிக்கத் துருப்புகளை பாதுகாப்பதாகக்கூறிக் கொண்டு வியட்னா சண்டையை விஸ்தரித்து தீவிரமாக்கவே அமெரிக்கா முயலுகிறது. உடனடியாக அமெரிக்கா தனது ஆக்கிரமிப்புப் போரை நிறுத்தி, துருப்புகளையெல்லாம் அடியோடு வாபஸ் பெறுவதே,அமெரிக்கத்துருப்புகளை பாதுகாக்க ஒரே, சிறந்த வழி என்று ஹனோய் ரேடியோ கூறியது.

### இந்தியா கவலை

டிசம்பர் 30-ந்தேதி வடவியட்னாம்மீது அமெரிக்கா மீண்டும் பெருத்த அளவில் குண்டு வீச்சுக்களை ஆரம்பித்திருப்பது பற்றி இந்தியா கவலை தெரிவித்தது.

குண்டுவீச்சை உடனே நிறுத்தி விட்டு பேச்சு வார்த்தை மூலம் அமைதியான முறையில் இந்தோ-சீன பிரச்சனையைத் தீர்க்க முயற்சிகள் எடுக்கப்படுமென்று இந்தியா நம்பிக்கை தெரிவித்திருக்கிறது.

இப்பிரச்சனை சம்பந்தமாக இந்தியாவுடன் வடவியட்னாம் தொடர்பு கொண்டுள்ளதென்று ஓர் அதிகாரி சொன்னார்.

நான்காவது தினமாகிய இன்றும் வடவியட்னாம் மீது யு. எஸ். விமானங்கள் குண்டுகளை வீசின. 1968-ல் குண்டு வீச்சுக்குப் பிறகு, இப்போதைய தாக்குதல்கள் மிகவும் கடுமையானதென்றும் நீண்ட நேரம் நடைபெறுகிறதென்றும் கூறப்பட்டுள்ளது.

### விமானங்கள் வீழ்ச்சி

மக்கள் நிறைந்த பகுதிகளிலும், ஆஸ்பத்திரிகள் பள்ளிகளிலும், அமெரிக்க விமானங்கள் குண்டுகளை வீசின, என்று ஹனோய் ரேடியோ அறிவித்தது.

தொடர்ந்து நான்காம் நாளாக இன்று 200 அமெரிக்க வெடி விமானங்கள் அலை அலையாக வந்து வடவியட்னாம் போக்குவரத்து, மக்கள் பகுதிகளில் வெடிகுண்டுகளை வீசித் தாக்கின.

ஞாயிற்றுக்கிழமை முதல் இன்றுவரை 7 அமெரிக்க விமானங்கள் சுட்டு வீழ்த்தப்பட்டன என்று ஹனோய் ரேடியோ கூறியது.

ஞாயிற்றுக் கிழமை ஹோவா அருகே சுட்டு வீழ்த்தப்பட்ட விமானத்திலிருந்து இறந்த இரு அமெரிக்க விமானிகள் பெயர்களையும் ஹனோய் ரேடியோ அறிவித்தது.

முதல் 3 நாள் குண்டு வீச்சில் முதியோர். மாதர், குழந்தைகள் உள்பட 47 பேர் கொல்லப்பட்டனர். ஏராளமான சேதம் ஏற்பட்டது என்று ஹனோய் ரோடியோ கூறியது

# அறுதியிட்டுச் சொல்லுவோம் அடக்குமுறையை வெல்லுவோம்

வ. ஆ. ஞானசாமி, திருவெற்றியூர்.

**சிரிப்பவர்கள் சிரிக்கட்டும் அது ஆணவச்சிரிப்பு என்ற மெட்டு**

**பல்லவி**

அடக்குமுறைகள் நடக்கட்டும் அது ஆட்சியின் முடிவு
அழிவுகாலம் நெருங்கும்போது ஏற்படும் துணிவு

**அனுபல்லவி**

அடக்க அடக்க எழுச்சிகொள்ளும்
உழைக்கும் கூட்டம்—அதை
அறிந்திடாது அடக்கப் பார்க்கும் தறுதலைக் கூட்டம்

அறுதியிட்டுச் சொல்லுவோம்
அடக்குமுறையை வெல்லுவோம்
உறுதிகொண்ட உழைக்கும் கூட்டம் உலகை
ஒரு நாள் ஆளுவோம்...... (அடக்கு)

**சரணம்**

சட்டம் அமைதி காப்பதற்கு போலீஸ்
வேண்டுமா ?—உழைக்கும்
சனங்கள் ஒன்றுசேர்ந்துவிட்டால் அதுவும் நிற்குமா ?

பதவி இருக்கும் வரையிலே
பாதுகாப்புக் குறைவில்லே
பதவி போனபின்பு உன்னை மக்கள்
தள்ளும் சிறையிலே (அடக்கு)

ஆட்சிபீடம் ஏறுமுன்னே பேச்சு கொஞ்சமா ?—அது
அத்தனையும் பதவி வந்தபோது லஞ்சமாய்
மாறிப்போன காட்சியை
மக்கள் கண்டு ஆட்சியை
மாற்றியமைக்க எழுந்துவிட்டால் காணுவாய்
உன்வீழ்ச்சியை (அடக்கு)

# சிம்சன் தொழிலாளர் காரணமின்றி கைது!

சென்னை, டிச. 29—
பெரம்பூர் பகுதியைச் சேர்ந்த சிம்சன் தொழிலாளர்களில் 7 பேரை போலீசார் 27 12—71ந் தேதி இரவு 1 மணிக்கு கைது செய்துள்ளனர்.

கைது செய்யப்பட்ட அனந்தராவ், ராமாராவ், சத்தியநாராயணராவ், இஸ்ரேல், ரமணய்யா ஆகிய இந்தியா பிஸ்டன் கம்பெனி தொழிலாளர்களும், வீல்அண்ட் ரிம்கம்பெனியைச்சேர்ந்த சீனிவாசன் ஆகியோரும் அண்ணாநகர் போலீஸ்ஸ்டேஷனில் வைக்கப் பட்டுள்ளனர்.

இவர்கள் கைது செய்யப் பட்டதற்கான காரணம் கூறப்படவில்லை. கைது செய்யப் பட்ட 27-ந்தேதி இரவு 1 மணியிலிருந்து மறுநாள் மாலை வரை சார்ஜ் ஷீட்டும் போடப் படவில்லை.

கைது செய்யப்பட்டவர்களுக்கு உணவும் வழங்கவில்லை. அவர்களைப் பார்க்கச் சென்ற சிம்சன் தொழிலாளத் தோழர்கள் அவர்களுக்கு உணவு வாங்கிகொடுத்துள்ளனர்.

# ஜெஸ்டனெர் ஊழியர் வேலைநிறுத்தம்!

சென்னை, டிச, 29—
சென்னை ஜெஸ்டனெர் நிறுவன ஊழியர்களின் கோரிக்கைகளை ஏற்க மறுத்த நிர்வாகத்தினர் சமரச பேச்சுக்கும் கூட உடன்பட மறுத்ததால் ஊழியாகள் நேற்று முதல் வேலை நிறுத்தம் செய்து வருகின்றனர்.

# பக்தியின் பேரால் பாவச் செயல் புரிந்தோர் கைது!

பாட்னா, டிச, 29—
''ஆனந்தமார்க்'' என்ற பக்தி நிறுவனத்தின் தலைவரான ஆனந்தமூர்த்தி என்ற பிரபாத்ரஞ்சன் சர்க்கார் என்பவர் இங்கு இன்று காலை, மத்திய புலன் விசாரணை ஸ்தாபனத்தால் கைது செய்யப்பட்டார்.

ஆனந்த மார்க் பொதுச் செயலாளரான ஆச்சார்த் சர்வேஸ்வர ஆனந்த அவதூயதும் கைது செய்யப்பட்டார்.

ஜூலை மாதம் ராஞ்சியில் மனித மண்டை ஓடுகளும் வெடி பொருள்களும் கண்டு பிடிக்கப் பட்டதாகக் கூறப் பட்டது சம்பந்தமாக அவர்கள் இருவரும் கைது செய்யப் பட்டார்கள்.

சம்பவம் பற்றி விசாரணை நடத்தும் பொறுப்பை மத்திய புலன் விசாரணை ஸ்தாபனத்திடன் மாநில அரசு ஒப்படைத்தது.

ராஞ்சி போலீஸ் கோரிக்கை மீது அரசு ஜூலை 22ல்முதலில் சர்க்கார் என்பவர் கைது செய்யப் பட்டார். ஆகஸ்ட் 3-ம் நாள் அவர் ஜாமீனில் விடுதலை செய்யப்பட்டார். மீண்டும் அவர் தற்போது கைது செய்யப்பட்டார்.

# சென்னையில் நான்கு தொழிலாளர்கள் கைது!

சென்னை, டிச. 29—
வடசென்னை பகுதியில் உள்ள டோல்கேட் அருகில் உள்ள அலைய்டு ஸ்டீல் ரோலிங் மில் நிர்வாகம் 6 தொழிலாளர்களை வேலைக்சனுபதிக்காததை கண்டித்து 11-11-71 தேதியிலிருந்து வேலைநிறுத்தம் செய்து வருகின்றனர். வேலை நிறுத்தத்தில் 85 தொழிலாளர்கள் ஈடுபட்டு வருகின்றனர். கடந்த 48 நாட்களாக வேலை நிறுத்தம் நடந்தும் உதவி லேபர் கமிஷனர் 27-12-71ந்தேதி பேச்சுவார்த்தைக்கு அழைத்தும்நிர்வாகம் வரமறுத்துவிட்டது. தொழிற்சாலை சட்டங்களைமீறி சில வெளியாட்களை கம்பெனிக்குள் அழைத்துசென்று 24 மணிநேரமும் கடுமையாக வேலை வாங்கப்படுகின்றனர்.

கடந்த 48 நாட்களாக தொழிலாளர்களுக்கு வேலையளிக்க மறுத்து உற்பத்தியை முடக்கம் செய்துள்ளனர். நாட்டுப் பாதுகாப்பிற்கு விரோதமான இந்த செயலை மேலும் ஊக்குவிக்கும் முறையிலே போலீஸ் நடவடிக்கை இருப்பதை தொழிலாளர்கள் கண்டித்து 28—12—71 மாலையில் மறியல் செய்தார்கள்.

மறியல் செய்த 4 தொழிலாளர்களைப் போலீசார் கைது செய்துள்ளனர். அனைவருக்கும் வேலையளிக்கவும் தொழிலாளர்களின் குறைந்த பட்ச நியாயமானகோரிக்கைகளை நிர்வாகம் ஏற்றுக்கொள்ளச் செய்யவும் தொடர்ந்து தொழிலாளர் போராடுகின்றனர்.

# ஆட்குறைப்பெனும் அவலம்!

ஆட்குறைப்பு என்ற பெயரில் நிலவரித்திட்டத் துறையில் பணியாற்றுகின்ற 500 என் ஜி ஓ க்களின் குடும்பங்கள், நாதியற்று நடுத்தெருவில் நிறுத்தப்படவிருக்கும், நிலையைத் தவிர்த்து அவர்களுக்கு மாற்று வேலைவாய்ப்பை அரசு ஏற்படுத்தித் தரவேண்டுமென மதுரை மாவட்ட என். ஜி. ஓ. சங்கத்தின் செயற்குழு அரசை கேட்டுக்கொண்டுள்ளது. மாவட்டத் தலைவர் திரு. உலகநாதன் தலைமையில் நடைபெற்ற செயற்குழுவில் மேலும் கீழ்க்கண்ட கோரிக்கைகளும் வலியுறுத்தப்பட்டன.

1) வாரம் ஐந்து நாட்கள் வேலை
2) வைப்பு நிதிக் கணக்கை பராமரிப்பதற்கு மாற்றுத் திட்டம்.
3) தேனி, பெரியகுளம், பழனி போன்ற நகரங்களுக்கு என். ஜி.ஓ. குடியிருப்புகள்.
4) மதுரை புறநகருக்கும் நகர ஈட்டுப்படி.
5) கிறிஸ்துமஸ், ரம்சான் ஆகிய விழாவின்போதும் கைத்தறி துணிகள் விற்பனையில் தள்ளுபடி (ரிபேட்) அளித்தல்.

நன்றி—''என். ஜி. ஓ. குரல்''

# குண்டுவீச்சை நிறுத்துக

## நிக்சனுக்கு ஜனநாயகக் கட்சி கோரிக்கை!

வாஷிங்டன், டிச. 30—
வடக்கு வியட்நாமில் அமெரிக்கா குண்டு வீசிவருவதற்கு ஜனதிபதி தேர்தலில் போட்டியிடும் 2 ஜனநாயகக் கட்சி வேட்பாளர்களும், மற்றும் 30, ஜனநாயகக் கட்சி உறுப்பினர்களும் கண்டனம் தெரிவித்தனர்.

நிக்சனின் போர் நடவடிக்கையையும், புதிய விமானத் தாக்குதல்களையும் தாக்கி, செனட்டர்கள் எட்மெண்ட முஸ்கியும், ஜார்ஜ்மிக்கோவர்னும் இம்மாதிரியான அறிக்கைகள் வெளியிட்டுள்ளனர்.

குண்டுவீச்சு தாக்குதல்களை உடனடியாக நிறுத்தும்படி நிக்சனை வலியுறுத்தி ஜனநாயகக் கட்சி உறுப்பினர்கள் தந்தி அனுப்பியுள்ளனர்.

இந்தக் குண்டுவீச்சுக் கொள்கையை மீண்டும் ஏற்படுத்துவது, எல்லா அமெரிக்கர்களும் விரும்புவது போல் போரை விரைவான முடிவுக்குக் கொண்டுவராது என்று அவர்கள் கூறியுள்ளனர்.

அமெரிக்க மக்கள் விரும்புவது போர் நிறுத்தமே தவிர, விமானச் சண்டைக்கான முயற்சிகள் அல்ல என்று அவர்கள் மேலும் கூறியுள்ளனர்.

இந்தோ-சீனவிலிருந்து அமெரிக்கத் துருப்புகள் பூமுமையான வாபஸ் பெறுவதற்கான தேதியை நிர்ணயிக்க வேண்டுமென்றும் இரு செனட்டர்களும் வற்புறுத்தியுள்ளனர்

வட வியட்நாமில் குண்டு வீசுவதின்மூலம் அமைதி ஏற்படாது பின்னர் அமைதிக்கு வழி என்ன? பாரீஸ் பேச்சு வார்த்தையில்விட்டுகொடுத்து உடன்பாடுகாணுவதன்மூலமே அமைதி ஏற்படுத்த முடியும் என்றும் அவர்கள் நிக்சனுக்கு அறிவுறுத்தியுள்ளனர்.

# அமெரிக்க ஏகாதிபத்தியம் வியட்நாமில் பயன்படுத்தும் மகா பயங்கரக் குண்டு

வாஷிங்டன், டிச. 30—
ஒரு சதுர மைலுக்கும் அதிகமான பரப்பில் உள்ள இடத்தில் உயிர்ப்பூண்டே இல்லாமல் அழிக்கும் சக்தி படைத்த மகா பயங்கரக் குண்டுகளை வியத்நாமில் அமெரிக்கா உபயோகிக்கிறது. இத்தகவலை முன்னேற்ற விஞ்ஞான அமெரிக்க சங்கத்தில் டாகடர் ஆர்தர் வெஸ்டிங், டாக்டர் பீபர் ஆகிய இரு விஞ்ஞானிகளும் தெரிவித்தனர்.

உடனடியாக ஹெலிகாப்டர்விமானங்கள்இறங்குவதற்கானதிடலை அமைக்கவே இந்தக் குண்டுகளை அமெரிக்கா பயன்படுத்துகிறது என்று கூறப்படுகிறது.

ஆனால், உண்மையில், இந்தக் குண்டுகளைப் போட்டால், ஒரு சதுர மைல் பரப்பிற்கும் மேல் உள்ள பகுதிகளில் உள்ள மனிதர்களோ, உயிர்ப்பிராணிகளோ ஒன்று கூடப் பிழைக்கமுடியாது. உயிர்ப்பூண்டே இல்லாது அழித்துவிடும்; உடைமைகள் அனைத்தும் அழிக்கப்பட்டு விடும்.

ஏழரை டன் எடையுள்ள இந்தக் குண்டு மர உச்சிகளுக்குச் சிறிது மேல் வெடிக்கிறது. இரண்டு கால் பந்தாட்ட மைதான அளவு இடத்தை ஒரே பொட்டல் வெளியாக ஆக்கிவிடுகிறது.

வியத்காங் நிலவறைகளை நாசம்செய்வதற்கும் இந்தக் குண்டுகளை உபயோகிப்பதாக சைகோனில் உள்ள அமெரிக்க தூதுவராலய அதிகாரிகள் தங்களிடம் கூறியதாக இந்த விஞ்ஞானிகள் தெரிவித்தனர்.

# கண்ணோட்டம்

### என்ஜின் முழுங்கிகளை விட்டுவிட்டு

## இரயில்வே தொழிலாளி வயிற்றில் அடிப்பதா?

இரயில்வே மந்திரி அனுமந்தையா அவர்கள் கடந்த 27—12—71-ல் இராமேஸ்வரததுக்குப் போனார். கோயிலுக்குப்போய் சாமி கும்பிட்டு விட்டு, வெளியே வந்து, இரயில்வே தொழிலாளர் கூட்டத்தில் பேசினார். அவருக்கு தொழிலாளர் சங்கங்களின் சார்பில், மாலை மரியாதையெல்லாம் செய்து, சம்பள உயர்வு...வேலை நிரந்தரம்... வீட்டு வசதி...வேலை நேரக் குறைப்பு... இதுபோன்ற பல கோரிக்கைகளுக்கும், மந்திரி ஏதாவது நல்லது சொல்லுவார் என்று, பாவம் தொழிளர்லர்கள் எல்லாம் அப்படியே, அமைதியாக, ஆவலோடு எதிர்பார்த்தார்கள்.

ஆம். லட்சக்கணக்கான தொழிலாளர்கள் பல்லாண்டுகள் பணி புரிந்தும் டெம்பரரியாகவே இருக்கும்போது—அவர்களுக்கு மாதம் 100 ரூபாய்கூட ஊதியம் இல்லாத போது—அவர்கள் குடியிருக்கும் குகைபோன்ற ஐதர்காலத்து வீடுகளுக்கு வெள்ளைக்காரன் காலத்தில் 8 அணுவும் 1 ரூபாயும வாடகை வாங்கி வந்தானென்றால், இப்போது ரூ. 20, 30, 50, 60 என்று ஏற்றிவிட்டபோது—வெள்ளைக்காரன் காலத்தில். தனிய ஷாப்புகள் மூலம் ஒரு ரூபாய்க்கு 4 பட்டணம் படி அரிசி கொடுத்தது போய், இப்போது படியரிசி ரூ. 2, 2—80க்கும் மேல் உயர்ந்துவிட்டபோது—வேலை நேரமோ தினம் 14 மணி நேரம், சில சமயங்களில் 20 மணி நேரம்கூட தொடர்ச்சியாக வேலை வாங்கப்படும்போது— பென்ஷன் என்ற பேரால் மாதம் ரூ 12-ம் ரூ 22 மே கிடைக்கும்போது— இந்தக் குறையெல்லாம் நீக்காவிட்டாலும், நல்ல சொல் ஒன்றாவது மந்திரி வாயிலிருந்து வராதா என்று அளவு கடந்த ஆவலோடு, பயபக்தியுடன் தொழிலாளர்கள் எதிர்பார்ப்பது இயல்புதானே!

பொன்னை வாய்திறந்து. முத்தான பற்களைக்காட்டி, மந்திரியும் பேசலானார். என்ன "லானார்" என்று கேட்கிறீர்களா? கேளுங்கள்:-

இரயில்வேக்கு ஆண்டுதோறும் 25 கோடி ரூபாய் நட்டம் ஏற்படுகிறதாம்! இதில் 8 கோடி ரூபாய் சரக்குகள் திருட்டுப் போவதால் ஏற்படும் நட்டமாம்! இந்த நட்டங்களை ஈடு செய்ய தொழிலாளர்கள் பாடுபட வேண்டுமாம்! சம்பள உயர்வு பற்றி இப்பொழுது பேசக் கூடாதாம்! பற்றாக்குறை பட்ஜெட் நீடிக்கும் வரை பார்லிமெண்டு சம்பள உயர்வுகளை, அனுமதிக்காதாம்! உபரி பட்ஜெட் தயாரிக்கும்போது, தொழிலாளர்களுக்கு அதைப் பிரித்து ... பிரித்து, ... பிரித்து......கொடுப்பார்களாம்!

இதுதான் அனுமந்தையா உதிர்த்த முத்து...பவளம்... கோமேதகம்...புஷ்பராகம்...இரத்தினம்...வைர, வைடூரியங்கள்......

25 கோடி நட்டம் வந்தால், அதற்கு யார் தாலியை அறுக்கிறது? ரூ 4,000 கோடி மூதலீடு செய்யப்பட்ட ஒரு தொழிலிலே—30,000 மைல்களுக்கு மேற்பட்ட இருப்புப் பாதையில் ரயில் ஓட்டிச் சம்பாதிக்கும் ஒரு தொழிலிலே—சுமார் 15 லட்சம தொழிலாளர்கள் மூச்சுத்திணறப்பாடுபடும் ஒரு தொழிலிலே—நட்டம்...நட்டம்...நட்டம்...என்று சொன்னால், எப்படி நம்புவது?

இத்தனை கோடி ரூபாய் முதலீட்டில்...இத்தனை லட்சம் பேர் பாடுபட்டு...எத்தனையோ கோடி கோடிப்பேர் புளி மூட்டை மாதிரி கம்பிகளைப் பிடித்துத் தொங்கிகொண்டும், அனுமார் தோள் மேலே இராமரும் லட்சுமணரும் ஏறிக்கொண்டது போல. ஒருவர் மீதொருவர் ஏறி மிதித்துக் கொண்டும் பயணம் செய்தும்- ஏற்றின கட்டணம் அத்தனையையும் கொட்டிக் கொடுத்தும்...நட்டம்...நட்டம்...நட்டம் என்றால், வயிறு எரியுமா, எரியாதா?

எப்படி நட்டம் வந்தது? அதற்கு யார் பொறுப்பு? பண்டாரம், பரதேசி, வேலை வெட்டியில்லாதவர்கள், நொண்டிமுடம் பிச்சைக்காரர்கள் ... இப்படி யாராவது டிக்கட் வாங்கிப் பயணம் செய்ய வக்கில்லாமல், வித்தவுட் டிக்கட்டிலே போனால், விசேஷ ஸ்குவாடுகள் போட்டு திடீர்ப் பரிசோதனை செய்து, அவர்களை வளைத்துப் பிடித்து, அத்தனையையும் பரிசோதனை செய்து, ஒரு வேலைச் சோத்துக்கு முடிச்சுப்போட்டு வைத்திருக்கும் ஒரு ரூபாயையும் பிடுங்கி விடுகிறபோதுமா ...நட்டம்! நட்டம்!... நட்டம்!... நட்டம் எப்படி வந்தது? யாரு பொறுப்பு? கேட்கநாதியில்லையென்று நினைத்துக் கொண்டார் மந்திரி? 8 கோடி ரூபாய் சரக்கு திருட்டுப் போச்சு என்றால், யாரு திருடினது! தண்டவாளத்தைக் கொறித்துத்தின்னும் பெருச்சாளி எது? இரயில்வே என்ஜினை விழுங்கிய சாண்டா மிருகம் எது? கொள்ளை கொள்ளைச் சம்பளம் வாங்கும் வெள்ளை யானைகள் எது? இரயில்வே போர்டு மெம்பர்கள் என்றும், அடிஷனல் டைரக்டர்கள் என்றும், டிபுடி டைரக்டர்கள், என்றும் செக்ரடரிகள், உதவி செக்ரட்டிரிகள், இப்படி ஆழ்வார்கள் நாயன்மார்கள் மாதிரி வரிசையாக அடுக்கி வைத்து ஒரு வேலையும் இல்லாமல் வெறும் கையெழுத்து மாத்திரம் போட்டு விட்டு, மாதம் 4000... 5000... அப்புறம் அந்த அலவன்ஸ்...இந்த அலவன்ஸ்...இலவச பங்களா...இப்படி எவவளவோ கொள்ளை கொள்ளை சம்பளம் கொட்டிக் கொடுக்க வேண்டியது அவசியமா? இத்தனை பேர் தேவையா? வறுமையை ஓட்டிச் சோஷலிஸம் கொண்டு வரப்போவதாகச் சொல்லும் இந்திரா ஆட்சியில் இது எல்லாம் தேவையா? இது எல்லாம் நியாயமா?—என்று கேட்கிறோம்

ஏன், ரயில்வே கட்டிடங்களுக்கெல்லாம், இவ்வளவு இரும்பு உருக்கு தேவைதானா? உருக்குப் பற்றாக்குறையால், ஆயிரக்கணக்கான இன்ஜினீரிங் பட்டரைகள் தயங்கித் தள்ளாடும் போது, மூடிப் போட்டு மூதேவி அடைந்து கிடக்கும்போது, இரயில்வே கட்டுமானங்களுக்கு இவ்வளவு இருப்பு உருக்குத்தேவை தானா? உருக்கு உத்தரங்கள், தூண்களுக்குப் பதிலாக கான்க்ரீட் போட்டால் ஆகாதா? இதிலே எத்தனை கோடி மிச்சமாகும்!

சாம்பலும் நிலக்கரியும் சேர்த்து அசல் நிலக்கரியென்று உயர்ந்த விலைக்கு நிலக்கரிச் சுரங்கக் கொள்ளைக் கூட்டம் விற்கிறபோது—அவர்களுடன் பெரிய அதிகாரிகள் ஊழல் பேரம் நடத்தி, அதிக விலை கொடுத்து மட்டரக நிலக்கரியை வாங்குவதினால் எத்தனை கோடி ரூபாய் நட்டம்? அந்த மட்டரக கரியினால் ஓட்டப்படும் இன்ஜின் எவ்வளவு தூரம் ஓட முடியும்? அதனால் ஏற்படக் கூடிய நட்டம் கொஞ்சமா?

வாகின்களையும், மற்றும் ரயில்வேக்குத் தேவையான பல்வேறு சாமான்களையும் உற்பத்தி செய்யக்கூடிய தொழிலாளர்களும் மூலப் பொருள்களும் தொழில் திறமையும் அரசிடம் இருந்தும்-அத்தனையையும் உறங்கப்போட்டுவிட்டு- அவற்றைத் தன்பட்ட முதலாளிகளிடமும் வெளிநாடுகளிடமிருந்தும் கொள்ளை விலைக்கு வாங்குகிறார்களே, இந்த வகையில் எத்தனை கோடி நட்டமிருக்கும்?

அரசாங்கமே நடத்தக்கூடிய வேலைகளைக்கூட, காண்ட்ராக்டுகளுக்கு விட்டு, காண்டராக்டர்களும் அதிகாரிகளும் —மால் கமால் பிசினஸ் நடத்துகிறார்களே, இதன் மூலம் எத்தனை கோடி நட்ட மிருக்கும்?

எக்கச் சக்கமான சாமான்களை கையிருப்பில், ஸ்டோர்களில் வைத்திருக்கிறார்கள். அது மட்டும் எத்தனையோ நூறு கோடி ரூபாய் மதிப்புள்ளது என்கிறார்கள். இதில் அவசியத் தேவைக்கு வேண்டியதை மட்டும் வைத்துக்கொண்டு, மற்றதையெல்லாம் விற்றுத் தீர்த்தால், அதில் மட்டுமே எத்தனையோ கோடி கைக்கு கிடைக்குமே!

அதுமட்டுமா? இங்கு பயனற்றது என்று கண்டம் செய்யப்பட்ட தண்டவாளங்களை குறைந்த விலைக்கு அராபிய நாடுகளுக்கு விற்கிறாகள். அவர்கள் நன்றாக அதைச் சரி செய்து தங்கள் நாட்டுக்கு பயன் படுத்திக் கொள்ளுகிறார்கள். ஏன், அதே தண்டவாளங்களை நாமே செம்மை செய்து பயன்படுத்தக் கூடாதா? அதை காயிலான் கடை விலைக்குத் தானே விற்கிறார்கள் !சரி செய்து இங்கேயே விற்றால், ஒரு டன் ரூ 300க்கு விற்கலாமே! இதன் மூலம் எவ்வளவு பணம் கிடைக்கும்?

எல்லாவற்றுக்கும் மேலாக, மந்திரி அனுமந்தையாவின் ரயில்வே டவனத்துக்கு...மூன்று மாதத்துக்கு ஒரு தடவை டிஸ்டெம்பர் பெயிண்டும், பிளாஸ்டிக் பெயிண்டும், அடிக்கிறாரே...இதை ஒரு 3 வருஷத்துக்காகவாவது நிறுத்தினால், அதன் மூலமே எத்தனையோ லட்சம் போய் மிச்சமாகுமே!

இப்படி எவ்வளவோ வழிகள் இருக்கு பணத்தைச் சேமிக்க—செலவைக் குறைக்க—வருமானத்தைப் பெருக்க...

அதையெல்லாம் விட்டு விட்டு, ஆண்டு தவறாமல், வருமானம் கம்மி ...செலவு ஜாஸ்தி...பற்றாக்குறை பட ஜெட்—சம்பள உயர்வு கொடுத்தால் பூமி பொத்து விடும், பூலோகம் இருண்டு விடும் இப்படி ஏதாவது சால்ஜாப்பு சொல்லி, ஏழைத் தொழிலாளிகள் வயிற்றில் அடிக்கிறார்களே, இது நியாயம் தானா?

இதுதான் சோஷலிஸமா? இதுதான் இந்திரா காந்தி கூறும் வறுமையை ஓட்டும் வேலையா?

—ஐ. மா. பா.

# அவசரகால நிலையை ரத்துசெய்க

## பங்களாதேஷின் ஜனநாயகத்துக்காக போராடும்போது இந்தியாவில் அதை நசுக்குவதேன்?

(2ம் பக்கத் தொடர்ச்சி)

டிக்காமல் தட்டுத் தடுமாறிக் கொண்டிருந்தது.

### அமெரிக்காவின் சுயஉருவம்

அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் அலலட்சண மூஞ்சியை—நிர்வாணக் கோலத்தை— இந்திய மக்கள் அனைவரும் முழுமையாகப் பார்ப்பதற்கு இப்பொழுது ஒரு வாய்ப்பு ஏற்பட்டது. அந்த வாய்ப்பு, பாகிஸ்தான் இராணுவ ஆட்சிக்கு ஆயுத சப்ளை செய்ய முன்வந்த போது ஏற்பட்டது! அந்த வாய்ப்பு, ஐ. நா பாதுகாப்புச் சபையிலும், ஐ நா. பொதுச் சபைக் கூட்டத்திலும் அது என்னநிலை எடுத்தது என்பதை அறிந்தபோது, ஏற்பட்டது! அந்த வாய்ப்பு, இந்தியாவுக்கு தருவதாக ஏற்கெனவே ஒததுக்கொண்ட கடனை இப்பொழுது தர முடியாது என்று நிறுத்திவிட்ட போது, ஏற்பட்டது! இந்த வாய்ப்பு, வங்கக் கடலுக்குள் 7-வது கப்பற்படையை முடுக்கிவிட்ட போது. ஏற்பட்டது! இந்த வாய்ப்பு, இந்தியாவையும் பங்களாதேசத்திலும் தலையீடு நடத்தப்போவதாக பயமுறுத்தியபோது, ஏற்பட்டது!

### அமெரிக்க உதவி ரகசியம்

இந்த யுத்தம் நடந்து கொண்டிருந்த காலத்தில், அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் இத்தகைய நிர்ப்பந்தங்களையும், நெருக்குதல்களையும் இந்திய அரசாங்கம் எதிர்த்து நின்ற போதிலும்கூட அரசாங்க அதிகாரிகள் எதிர்காலத்தில் அமெரிக்காவிடமிருந்து உதவிகள்பெறுவதை வெறுத்து ஒதுக்கப் போவதில்லை என்று வெளிப்படையாகக் கூறியிருக்கிறார்கள்.

அமெரிக்காவிடமிருந்து பெருவாரியான அளவில் இந்தியா உதவி பெற்றதின் மூலம், நமது நாட்டின் நிலைமை என்னவாயிற்று? நமது நாட்டின் அபிவிருத்திக்குக் கடுமையான தீங்கை விளைவித்து விட்டது.

ஒரு கையால் அது உதவி கொடுத்துக் கொண்டே மறு கையால், பாகிஸ்தானை இழுத்துக் கொண்டுபோய், சீயண்டோ, சியாட்டோ இராணுவக் கூட்டணிகளில் மாட்டிவிட்டு, உச்சந்தலை முதல் உள்ளங்கால் வரை அதை ஆயுத பாணியாக்கி, இந்தியாவின் மீது இரண்டு யுத்தங்களைச் சுமத்தியிருக்கிறது.

ரூபாய் மதிப்பைக் குறைக்குமாறு அது நிர்ப்பந்தித்துள்ளது. வடவியட்நாமுடனும், கொரிய ஜனநாயகக் குடியரசுடனும், கியூபாவுடனும் வர்த்தக உறவுகளை வளர்க்க விடாமல் இந்திய அரசாங்கத்தை அது பலமாக நிர்ப்பந்தித்தது. தென் வியட்நாம் மக்களுக்கு எதிராக காலனியாதிக்க யுத்தத்தை நடத்துவதற்கு தென் வியட்நாமுக்கு வாகனங்களையும் மற்ற பொருள்களையும் சப்ளை செய்ய அது நிர்ப்பந்தித்தது.

மேலும் அதனுடையபெரும் பாலான உதவி பிணைக்கப் பட்ட கடன்களாக இருப்பதால் இந்தப் பிணைக்கப் பட்ட கடன்களின் மூலம் வாங்கும் பொருள்களுக்கு அசாதாரண விலை கொடுக்குமாறு இந்தியாவை அது நிர்ப்பந்திக்க முடிந்தது.

### பி. எல். 480 நிதியை முடக்குக

இந்த முறைகளின் மூலமாகவெல்லாம் நம் நாட்டின் பொருளாதாரத்துக்கு பெருஞ்சேதத்தை அது உண்டுபண்ணியுள்ளது.

எனவே இந்திய அரசாங்கம் அமெரிக்க உதவி பெறுவதை உடனே நிறுத்த வேண்டும் என்றும், எல்லா கடன்களையும் திருப்பிக் கொடுப்பதை ஒத்திவைக்கவேண்டும் என்றும், இந்தியாவிலுள்ள அமெரிக்கத் தூதரகத்தின் கணக்கிலிருக்கும் பி. எல். 480 நிதியை முடக்க வேண்டும் என்றும், ஜீவாதாரமான அமெரிக்க எண்ணெய் சுத்திகரிப்பு ஆலைகளையும் நாட்டிலுள்ள மற்ற அமெரிக்கச் சொத்துகளையும் நாட்டுடைமையாக்க வேண்டும் என்றும் அரசியல் தலைமைக் குழு கோருகிறது.

இந்திய அரசாங்கம் தென் வியட்நாம், கம்போடிய தற்காலிக புரட்சி அரசாங்கங்களை அங்கீகரிக்கவேண்டும் என்றும், வடவியட்நாம், கொரிய ஜனநாயகக் குடியரசின் தூதரக அந்தஸ்தை உயர்த்த வேண்டும் என்றும்,கியூபாவுடனும், ஜெர்மன் ஜனநாயகக் குடியரசுடனும், தூதர்களைப் பரிவர்த்தனை செய்து கொள்ள வேண்டும் என்றும், வடவியட்நாமுடனும், வட கொரியாவுடனும், கியூபாவுடனும்வர்த்தக உறவுகளை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும் என்றும் தென் கொரிய, தென் வியட்நாம் நாடுகளிலுள்ள அமெரிக்கப் பொம்மை அரசுகளுடன் எல்லா வர்த்தகத்தையும் நிறுத்த வேண்டும் என்றும் அரசியல் தலைமைக் குழு மேலும் கோருகிறது.

### சோவியத்துக்கு பாராட்டு

அமெரிக்கச் சூழ்ச்சியை முறியடிப்பதில் சோவியத் யூனியனின் பாத்திரத்தை அரசியல் தலைமைக் குழு பாராட்டுகிறது. தகராறில் குறுக்கிடுவதற்கு எதிராக அது எச்சரித்தது அமெரிக்கமிரட்டல்முயற்சிகளுக்குப்பதிலடியாக இந்துமா சமுத்திரத்துக்கு தனது கப்டல் படையை விரைந்தனுப்பியது யுத்தம் நடைபெற்ற சோதனையான நாட்களில் ஐ நா. பாதுகாப்புச் சபையில் அமெரிக்கத் தூண்டுதலில் கொண்டுவரப்பட்ட தீர்மானத்தைமுறியடிப்பதற்குமூன்று முறை அது தன் ரத்து அதிகாரத்தைப் பயன்படுத்தியது

### சீன நிலைக்கு எதிர்ப்பு

யாகியாகான் ஆட்சிக்கு மக்கள்சீனக் குடியரசு அரசாங்கம் தொடர்ந்து ஆதரவளித்ததை அரசியல் தலைமைக் குழு வன்மையாக எதிர்க்கிறது. இந்தக்கால கட்டம் முழுவதிலும் ராணுவக் கும்பல் புரிந்த, முன்னெப்போதும் கண்டிராத அட்டூழியங்களையும், 10 லட்சத்துக்கும் அதிகமான மக்கள் கொன்று குவிக்கப்பட்டதையும் பாராமல், மக்கள் சீனக் குடியரசு அரசாங்கம் கண்ணை மூடிக் கொண்டிருந்ததையும், இந்த அடக்குமுறை ஆட்சிக்கு எதிராக கடுமையான விடுதலைப் போராட்டத்தில் மக்கள் ஈடுபட்டிருந்தனர் என்ற உண்மையை ஏற்காமலிருந்ததையும் இதைப் பிரிவினை இயக்கம் என்று அழைத்ததையும் அரசியல் தலைமைக்குழு எதிர்க்கிறது.

சோசலிஸ்ட் ஆட்சிக்கு எதிராகதிபேத்தில்மிகவும் கொடுங்கோலர்களான, மூடத்தனம் வாய்ந்த லாமாக்கள் செய்த கலகத்துடன் ராணுவ ஆட்சிக்கு எதிராக ஏழைக்கோடி பங்களாதேச மக்கள் நடத்திய போராட்டத்தை சீன அரசாங்கம் ஒன்றாக வைத்துப் பார்ப்பது கேலிக் கூத்தானதாகும்.

### விழிப்புடனிருக்க வேண்டும்

பங்களாதேசத்திலுள்ள அமெரிக்க ஆதரவு சக்திகளுடன்சேர்ந்து ஏகாதிபத்தியவாதிகள் சதி செய்வார்கள் என்றும் சொல்லவொண்ணா பெருந் தியாகங்கள் செய்து பெற்ற வெற்றியை ஒன்றுமில்லாமல் செய்யவும் பாகிஸ்தானுடன் ஒருவித நெருக்கமில்லாத சமஷ்டியை உண்டுபண்ணவும் பகீரத முயற்சிகள் செய்வார்கள் என்றும் பங்களாதேச மக்களை அரசியல் தலைமைக் குழு எச்சரிக்கிறது, பங்களாதேச சுதந்திரப் போராட்ட வீரர்களும், ஜனநாயக உள்ளம் படைத்த மக்களும் விழிப்புடனிருப்பார்கள் என்றும், அரசியல் தீர்வின் பெயரில் செய்யப் படும் இந்தச் சூழ்ச்சிகளை முறியடிப்பார்கள் என்றும் அரசியல் தலைமைக் குழு நம்புகின்றது.

பங்களாதேசம் ஏற்கனவே நிலையான உண்மையாகும். இந்த உண்மையை மென்மேலும் நாடுகள் உணர்ந்து பங்களாதேச சுதந்திர அரசை அங்கீகரிக்கும் என்று அரசியல் தலைமைக் குழு நம்புகிறது. இத்துறையில் எல்லா சோஷலிஸ்ட் நாடுகளும் குறிப்பாக சோவியத் யூனியனும் முன் முயற்சி எடுக்க வேண்டும் என்று அரசியல் தலைமக்குழு வேண்டுகிறது

பங்களாதேசத்தின் எல்லா ஜனநாயகக் கட்சிகளும் மக்களும் விழிப்புடனிருக்க வேண்டும் என்றும் சுதந்திரச் செய்தி ஒவ்வொரு நகரத்துக்கும் பெரிய ஊருக்கும் கிராமத்துக்கும் எட்டுமாறு பார்த்துக் கொள்ள வேண்டும் என்றும் தேசிய சுதந்திரம் தொழிலாளி வர்க்கத்தின் விவசாயி வர்க்கத்தின் மற்ற பகுதி மக்களின் இயக்கங்களுக்கான பரிபூரண சுதந்திரத்துக்கு வழி வகுக்குமாறு பார்த்துக் கொள்ள வேண்டும் என்றும் அரசியல் தலைமைக்குழு அறைகூவி அழைக்கிறது.

### இந்திய துருப்புகளை வாபஸ் பெறுக

பங்களாதேச அகதிகளைத் திருப்பி அனுப்புவதற்கு இந்திய அரசாங்கம் துரிதமான ஏற்பாடு செய்ய வேண்டும் என்று அரசியல் தலைமைக் குழு வற்புறுத்துகிறது. பாகிஸ்தானி துருப்புகள் உண்டுபண்ணிய நாசத்திலிருந்து பங்களாதேசத்தின் பொருளாதாரத்தை விரைவில் மீட்பதற்கு நம் சக்திக்குட்பட்ட எல்லா பொருள் உதவிபுரியவேண்டும் தேவையாக இருக்கும் போது இந்திய அரசாங்கம் எவ்வளவு விரைவில் முடியுமோ அவ்வளவு விரைவில் அதன் இராணுவத்தை திரும்பப் பெறவேண்டும். சட்டம் ஒழுங்குப் பிரச்னையை பங்களாதேச அரசாங்கத்தின் கைகளிலும் அதன் சுதந்திரப் படையின் கைகளிலும் முற்றாக விட்டு விட வேண்டும்.

இந்த சந்தர்ப்பத்தில் யுத்தக் குற்றவாளிகளையும் பங்களாதேச மக்களுக்கு எதிராக குற்றங்கள் புரிந்துள்ள மற்றவர்களையும் இந்திய அரசாங்கம் பாதுகாக்கக் கூடாது. சட்டப்படி நடவடிக்கை எடுப்பதற்குக் கோரப்படும் இந்தக் குற்றவாளிகளை பங்களாதேச அரசாங்கத்திடம் ஒப்புவிக்க வேண்டும்.

### பயங்கர அடக்குமுறை

இப்போது யுத்தம் முடிந்து விட்டது மேற்கில் இந்தியாவாலும் பாகிஸ்தானாலும் போர் நிறுத்தம் ஒப்புக் கொள்ளப்பட்டுள்ளது. எனவே அவசரகால நிலைமை நீடிப்பதற்கு எந்த நியாயமும் இல்லை என்று அரசியல் தலைமைக் குழு உறுதியாக நம்புகிறது, அது உடனே அகற்றப்பட வேண்டும் என்று கோருகிறது.

பங்களாதேசத்தில் ஜனநாயகத்துக்காகப் போராடுவதும் உள்நாட்டில் ஜனநாயகத்தை நசுக்குவதும், ஏக காலத்தில் நடைபெறமுடியாது. இந்தச் சந்தர்ப்பத்தில், யுத்தம் நடக்கும் போதே கூட ஜனாதிபதி ஆட்சியின் கீழ் இந்திய அரசாங்கம் தொழிலாளர், விவசாயிகள் ஜனநாயக இயக்கத்தின் மீதும், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மீதும் தன்னுடைய பயங்கரத் தாக்குதலைக் குறைக்காதது மட்டுமின்றி தீவிரப்படுத்தவும் செய்தது என்று அரசியல் தலைமைக் குழு சுட்டிக் காட்டவிரும்புகிறது.

போலீஸ்தீவிர உதவியுடனும் நிர்வாகத்தின் உதவியுடனும் சத்திர பாஷித், இளைஞர் காங்கிரஸ், குண்டர் கும்பல்களைச்சேர்ந்தவர்கள் பல பகுதிகளையும், கிராமங்களையும் தொடர்ந்து தாக்குகின்றனர். தொழிற்சங்க, ,விவசாய சங்க மாணவர் சங்க, மாதர் சங்க ஊழியர்களைக் கொலை செய்கின்றனர். ஐ. மு. அரசின் ஆட்சிக் காலத்தில் நிலப் பிரபுக்களிடமிருந்து விவசாயிகள் பெற்ற நிலத்தைப் பறிப்பதற்கு நிலப் பிரபுக்கள் செய்யும் முயற்சிகளுக்கு அவர்கள் உதவுகின்றனர். ஜனநாயக இயக்கத்தைச் சேர்ந்த நூற்றுக் கணக்கான ஊழியர்கள் விசாரணையின்றி காவலில் வைக்கப்பட்டுள்ளனர். ஆயிரக் கணக்கான பேர் பொய் வழக்குகளில் ஈடுபடுத்தப்பட்டு சிறையில் வைக்கப்பட்டு அவர்களுக்கு ஜாமீன் மறுக்கப் பட்டுள்ளது. பத்தாயிரக் கணக்கான பேர்களுக்கு எதிராகப் பிடி வாரண்டுகள் பிறப்பிக்கப்பட்டுள்ளன. இந்த அடக்குமுறை ஆட்சிக்கு முடிவுகட்ட வேண்டும் என்றும், கைது செய்யப்பட்டிருப்பவர்களையெல்லாம் விடுதலை செய்யவேண்டும் என்றும் எல்லா பொய் வழக்குகளையும் திரும்பப்பெற வேண்டும் என்றும் அரசியல் தலைமைக் குழு வற்புறுத்துகிறது.

இவ்வாறு செய்வதுதான் விரைவில் நடத்தப்படும் என்று வாக்களிக்கப் பட்டிருக்கும் தேர்தல் நியாயமாக நடைபெறுவதற்கு உறுதியளிக்கும், இல்லாவிட்டால் மோசடியான தேர்தலாகத்தான் அது இருக்கும். ஜனநாயகத்தைக் கேலிக்கூத்தடிப்பதாகத்தான் அது இருக்கும்

### யாருடைய வெற்றி

இந்தியத் துருப்புகளும், பங்களா தேச சுதந்திரப் போராட்ட வீரர்களும், மக்களும் செய்த அரும்பெரும் தியாகத்தை காங்கிரஸ் கட்சி தன்னுடைய குறுகிய கட்சி நலன்களுக்குப் பயன்படுத்த முயலுகிறது என்பதை மக்கள் உணரவேண்டும் என்று அரசியல் தலைமைக்குழு விரும்புகிறது, இந்த வெற்றியை பாகிஸ்தான் இராணுவ கும்பலின் மீது இரு தேசங்களையும் சேர்ந்த எல்லா ஜனநாயக சக்திகளும் பெற்ற வெற்றி என்று காட்டுவதற்கு பதில் ஆளும் காங்கிரஸ் கட்சி இதை தன்னுடைய சொந்த வெற்றி என்று காட்ட முயலுகிறது. மேற்கு வங்கத்தில் தேர்தல் நடத்த வேண்டுமா வேண்டாமா? அவசரகால நிலைமை நீடிக்க வேண்டுமா? அகல வேண்டுமா? இவைகளையெல்லாம் காங்கிரஸ் அரசாங்கம் மட்டுமே காங்கிரஸ்கட்சிஅதிக பட்ச ஆதாயத்தை எடுப்பதை அடிப்படையாக வைத்துத் தீர்மானிக்கிறது.

### மக்கள் மீது சுமை

யுத்தத்தின் பின் விளைவுகள் நாட்டின் பொருளாதார நிலைமையை நிச்சயம் மோசமாக்கும். நாட்டின் பொருளாதாரம் ஏற்கனவே ஆழ்ந்த நெருக்கடியில் சிக்கித் தவித்துக் கொண்டிருக்கிறது யுத்த நாசத்தை சீர்செய்வதில் பங்களாதேச மக்களுக்கு உதவுவதற்கு நாட்டு மக்கள் அனைவரும் அக்கறை கொண்டுள்ளனர். ஆனால் கடந்த பட்ஜெட்டுக்குபின் ஏற்கனவே போடப்பட்ட இருதுணை வரி விதிப்புகளில் கண்டது என்ன? மக்களின் நல்லுணர்வுகளைப் பயன்படுத்தி அரசாங்கமும் ஆளும் வர்க்கங்களும் பழைய வரிவிதிப்பு, நிதிக் கொள்கைகளையே தொடர்ந்து பின்பற்றுகின்றன. நிலப்பிரபுக்களையும், ஏகபோகமுதலாளிகளையும், வர்த்தகச் சூதாடிகளையும் அனேகமாகத்தொடாமல்விட்டுவிட்டு மொதுமக்கள் மீது கடுமையான மறைமுக வரிகளைப் போடுகிறது. கடுமையான பற்றாக்குறை பட்ஜெட் போடுகிறது.

இந்த நடவடிக்கைகள் எல்லாம் விலைகளை மேலும் அதிகமாக உயரச் செய்வதின் மூலம் மக்கள் மீது கடும் சுமை ஏற்றுவதற்குத்தான் வழிவகுக்கும். உழைக்கும் மக்களை மேலும் வறுமைப் படுகுழியில் தள்ளும் அதேசமயம் ஏகபோக முதலாளிகளையும், நிலப்பிரபுக்களையும், வர்த்தகச்சூதாடிகளையும் மேலும் கொழுக்கச் செய்யும்.

### மக்களை அணி திரட்டுக

எனவே வரும் நாட்களில் இடதுசாரி, ஜனநாயக சக்திகள் இந்தக் கொள்கைகளுக்கு எதிராக ஒன்றுபட்ட உறுதியானப்போராட்டங்களுக்காகவும் அந்நிய, இந்திய ஏகபோக முதலாளிகள், நிலப் பிரபுக்கள், வர்த்தகச் சூதாடிகள் நிலைகளைத் தகர்த்து தேசியப்பொருளாதாரத்தைத் துரிதமாக முன்னேறச் செய்வதற்குத் தேவையான நிதி திரட்டுவதை உறுதிப்படுத்தும் கொள்கைகளுக்காகவும் பொது மக்களுக்கு ஸ்திரமான நியாயமான விலைகளை நிர்வகிப்பதற்காகவும் மக்களை அணி திரட்டுவது அவசியமாகும்.

தங்களுடைய அணிகள் தொடர்ந்து பிளவுபட்டிருப்பதின் அபாயத்தை உணருமாறும் ஆளும் வர்க்கங்களும் காங்கிரஸ் கட்சியும் பின்பற்றும் இந்த மக்கள் விரோதக் கொள்கைகளுக்கு எதிராக மக்களை ஒன்று திரட்டும் வரலாற்றுப் பணியை நிறைவேற்றுவதற்கு ஒற்றுமையைக் கட்டுமாறும் எல்லா இடதுசாரி. ஜனநாயகக் கட்சிகளையும் அரசியல் தலைமைக் குழு கேட்டுக் கொள்ளுகிறது:

### ஊர்வலத்தில் ......

( 1-ஆம் பக்கத் தொடர்ச்சி )

வீரய்யா என்பவரை அடித்தும் நொறுக்கி அவர் கடைகளையும் சூரையாடி, அவர் தம்பி ராமுவை காலில் வெட்டி விட்டார்கள்.

2. சுமார் 6 மாதத்திற்கு முன் ஜீவாமன்றத்தில் படுத்திருந்த ஆறுமுகம் என்ற தோழரை இரவு 1 மணிக்கு எழுப்பி 5, 6 பேர்கள் வந்து பலமாக அடித்துப் போட்டு விட்டு ஓடிவிட்டார்கள்.

3. 24-12-71—தேதியன்று ஜீவா மன்றத்தின் முன்பு போர்டு கட்டிக் கொண்டிருந்த மாணவர் ஸ்டாலின் என்பவரை தி.மு.க. ஊராட்சி தலைவர் துரைராஜ், நேரில் பலரைக் கூட்டிக் கொண்டு வந்து அவரே அந்த மாணவரை அடித்தார்.

4. 29-12-71—தேதியன்று அவசர ஊழியர் கூட்டம் போட்டு இந்த ஊரில் கம்யூனிஸ்ட்கட்சியைஒழித்தே ஆகவேண்டும் என்றும், என்ன ஆனாலும் சரி என்றும், அதற்காக 30—12—71 தேதியில் நடக்க விருக்கும் மார்க்சிஸ்ட் ஊர்வலம்- பொதுக் கூட்டத்தைக் கலைக்க வேண்டுமெனவும் முக்கிய தி. மு க தலைவர் ஒருவர் பேசினார். வந்திருந்த 100 பேர்களையும் சோறு போட்டு 30 — ந்தேதி வரை வைத்திருந்தார்.

போலீஸ் பாராமுகம்

இவ்வளவும் போலீஸிற்குத் தெரியும். தெரிந்திருந்தும் எந்த தடுப்பு நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை. முயற்சித்திருந்தால் காலையிலிருந்தே ஏற்பாடு செய்து தடுத்திருக்கலாம்.

இந்நிலையில் கூட்டம் நடந்து கொண்டிருக்கும்பொழுது 8 மணிக்கு மாவட்ட போலீஸ் அதிகாரியும், மாவட்டக் கலெக்டரும், கோட்டாட்சித் தலைவரும் ஸ்தலத்திற்கு வந்தார்கள்.

எங்களிடம் வந்து, நிலைமையைக் கட்டுப்படுத்த முடியவில்லை; கல் எறியாமல் தடுக்க முடியவில்லை; இடத்தைக் கண்டுபிடிக்க முடியவில்லை. ஆகையால் அதுவரையில் கூட்டம் நடத்தியது போதுமென்றும், வேறு ஒருநாள் கூட்டம் நடத்தலாம் என்று கேட்டுக் கொண்டார்கள். தடியடியும், கண்ணீர்ப்புகையும் போட்டுள்ளோம் என்றார்கள்.

அதனால் தோழர் உமாநாத் கூட்டத்தில் பேசாமலே வர வேண்டிய நிலைமை ஏற்பட்டது.

தி. மு. க. வின் சர்வாதிகார போக்கு

ரௌடித்தனத்தாலும், சர்வாதிகாரத்தாலும் எதிர்க் கட்சிகளின் அரசியல் நடவடிக்கைகளைத் தடுத்துவிட தி. மு. க.வினர் நினைப்பது அரசியல் அகம்பாவப் போக்காகும். ஆட்சி நடத்தும் கட்சி என்றால் சட்டம், அமைதி, முதலியவற்றை தன்கையில் எடுத்து எதிர்க் கட்சிகளின் கூட்டத்தையும் அரசியல் நடவடிக்கைகளையும் தடுக்க சர்வாதிகாரப் போக்கையாளுவதை. ஜனநாயக எண்ணம் கொண்ட எந்த கட்சியும் சகித்துக் கொண்டு இருக்காது, இருக்க முடியாது என்பதையும் வலியுறுத்த விரும்புகிறேன்.

ஆகையால், திட்டமிட்ட தாக்குதல்களை நடத்தி வரும் மதுரை மேற்கு பஞ்சாயத்து யூனியன் தலைவர் மீதும் அவரைச் சார்ந்தவர்கள் மீதும் அரசும், அதிகாரிகளும் மாவட்ட போலீஸ் அதிகாரிகளும் தகுந்த நடவடிக்கை எடுக்க வேண்டுமென்றும் கேட்டுக்கொள்கிறேன்.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (13 முதல் சந்து, வடக்கு சித்திரை வீதி, மதுரை-1) அச்சிட்டு, வெளியிடுபவர் ஆசிரியர் கே. முத்தையா.